10-1.

# அத்வைதம்

## ஓர் அறிமுகம்

ஸ்ரீப்ரம்மத்திற்குச் சமர்ப்பணம்.

அடியேன்,
14-7-05
(பாரதிசந்திரன்)

**பாரதிசந்திரன்**




வெளியீடு

திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிட்.,
154, டி.டி.கே. சாலை, ஆள்வார்பேட்டை, சென்னை – 600 018.
தொ.பேசி. 2435 4157, 2435 5299

# அத்வைதம்
## ஓர் அறிமுகம்

பாரதிசந்திரன் ©

முதற் பதிப்பு
ஜனவரி 2004

வடிவமைப்பு
ஸ்ரீதரன்
மித்ர, சென்னை 24

ஒளியச்சு
மித்ர ஆர்ட்ஸ் & கிரியேஷன்ஸ்
சென்னை 24. தொ.பேசி. 23723182

அச்சாளர்

பதிப்பாளர்
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிட்.,
154, டி.டி.கே. சாலை, ஆள்வார்பேட்டை
சென்னை - 600 018.
தொ.பேசி. 2435 4157, 2435 5299

அச்சிட்டோர்
அப்பர் அச்சகம்

பக்கம் : 96

விலை ரூ 30.00

10-1

# பதிப்புரை

இந்திய தத்துவ ஞானங்கள் அனைத்தும் வேதங்களிலிருந்தே தோன்றின என்று மேக்சுமுல்லர் போன்ற மேனாட்டறிஞர்களும் இராமகிருட்ண பரம அம்சர் விவேகானந்தர் போன்ற ஞானிகளும் நம்பினர். அதனை உலகம் முழுவதும் பரப்ப முற்பட்டனர். அமெரிக்கா சென்று சொற்பொழிவாற்றிய விவேகானந்தர் வேதாந்தத்தின் பெருமையை நிலைநாட்டினார். இதற்குள்ளும், இரண்டு பிரிவுகளுண்டு என்று வேதாந்திகள் கூறுவர். இறைவன் வேறு, ஆன்மா வேறு என்று கூறும் துவைதம், இவை இரண்டும் வேறல்ல, ஒன்றே எனக் கூறும் அத்துவைதம். இவ்வாறு வேதாந்திகளுக்குள்ளேயே வேறுபாடுண்டு.

வேதாந்தத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது சைவசித்தாந்தம். தென் தமிழ்நாட்டிலும், வீரசைவம் என்ற பெயரில் காசுமீரிலும் கர்நாடகத்திலும் பரவியிருந்தது. பதி (இறை), பசு (உயிர்), பாசம் (ஆணவமலம்) என்று மூன்று உண்டு. பொதுவாக பாசத்தால் கட்டுப்பட்ட பசு, அதை உதறித் தள்ளிவிட்டால் பதியை அடைய முடியும். ஆனால் எக்காலத்திலும் பதியும் பசுவும் ஒன்றாக முடியாது என்ற கூறுவது சைவசித்தாந்தம்.

தமிழ்நாட்டில் சைவ மடங்களும் வேதாந்த மடங்களும் தஞ்சை மண்ணில் நிரம்பத் தோன்றின. தமிழ் நாட்டு வேதாந்த மடங்களில் அத்துவைத மடங்கள் பல உள்ளன. துவைதம் என்பது சீவான்மாவும் பரமான்மாவும் வேறுவேறு எனக் கொள்ளப்படும் தத்துவம். அத்துவைதம் என்பது மேற் கூறப்பட்ட இரண்டும் வேறு வேறல்ல, இரண்டும் ஒன்றே என்பது. பின் கூறப்பட்ட அத்துவைத மடங்களில் காரைக்குடியில் உள்ள திருக்கோவிலூரா் மடம் தலையாயது. ஆண்டவர் என அழைக்கப்பெறும் முத்துராமலிங்க ஞான தேசிகர் தொடங்கிய இம்மடாலயத்தில் பயின்ற கண்டனூார் நாகலிங்கய்யா அறிவும் ஞானமும் தெளியப் பெற்றவர்.

இவர்தம் வாழ்க்கை வரலாற்றையும் இவர் படைத்த நூல்களின் உள்ளடக்கத்தையும் ஆய்வு செய்வதுமே இந்நூலின் நோக்கம். இதனைச் சிறப்புறச் செய்த பேராசிரியர் பாரதிசந்திரன் அவர்களைப் பாராட்டுகிறோம்.

வேதாந்த மடங்களும், வேதாந்தம் பயிலும் மாணவர்களும், சாதுக்களும் இந்நூலைப் படித்துப் பயன்பெறுவார்களாக.

**- சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# வாழ்த்துரை

**தவத்திரு நாச்சியப்ப சுவாமிகள்**
*கோவிலூர் மடாலய மடாதிபதி*

வேதாந்தம் என்பது முடிவான முடிவாகும். இதனை வடமொழியில் மக்கள் பயின்று வந்த காலத்தில் அதுவும் குறிப்பாகச் சாதுக்களே கற்று வந்த காலத்தில் இதனைத் தமிழில் பயின்றால் அனைவரும் பயன்பெறலாம் என்ற பெருநோக்குடன் தமிழில் வேதாந்தம் பயிற்றுவிக்க வேண்டும் என்ற பெருநோக்குடையவராய்க் காரைக்குடியிலே தோன்றிய முத்துராமலிங்க தேசிகர் என்ற ஆண்டவர் ஒரு திருமடத்தைக் கோவிலூரிலே உண்டாக்கிச் சாதுக்களை அழைத்துத் தமிழிலே வேதாந்தம் சொல்லி வைத்தார். இம்மடத்தில் கற்ற ஏராளமான சாதுக்கள் அங்கங்கே சென்று வேதாந்த மடங் களை உண்டாக்கிக் கோவிலூர் மரபு என்று அழைத்துக் கொண்டு பல வேதாந்த மடங்களை உருவாக்கித் தமிழில் வேதாந்தம் கற்பித்து வந்தனர். ஸ்ரீ சிருங்கேரி மடத்தைக் குருபீடமாகக் கொண்ட இம்மடாலயம் பல வேதாந்த நூல்களை வெளியிட்டுள்ளது. இத்தகைய புகழ்படைத்த கோவிலூர் ஆண்டவரின் காலத்தே இத்திருமடத்தில் இருந்து வேதாந்தப்பணி புரிந்தவர் நமது கண்டனூர் நாகலிங்க அய்யா, ஆண்டவரைப் பின்பற்றி நிறைய நூல்களை எழுதியவர் நாகலிங்க அய்யா. அவரை உலகறியச் செய்ய வேண்டும் என்ற முயற்சியில் கண்டனூர் பாலையூரைச் சேர்ந்த பாரதிசந்திரன் (சந்திரசேகரன்) என்பார் மிக முயன்று ஆய்வு செய்து இதனை எழுதியுள்ளார். அவரது முயற்சியை நாம் பாராட்டுவதோடு அவருக்கு எல்லாவித நலன்களையும் அருள வேண்டும் எனக் கோவிலூர் அருள்மிகு கொற்றவாளீசர் உடனமர் திருநெல்லை திருவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

**ஸ்ரீ சற்குருநாதன் துணை**

*கோவிலூர் மடாலயம்*
*கோவிலூர் -630 307*
*சிவகங்கை மாவட்டம்*

107

# வாழ்த்துரை

காப்பியக் கவிஞர் நா. மீனவன்

வேதாந்தப் பொருளைத் தமிழில் விரித்துரைக்கும் பணியில் பல்லாண்டுகளாக கோவிலூர் மடாலயம் ஈடுபட்டு வந்துள்ளது. வேதாந்தம் பயில விரும்பும் சாதுக்களுக்கும், அன்பர்களுக்கும் உணவிட்டுத் தங்க இடம் கொடுத்து வேதாந்த நூல்களை வகையாக முறைப்படுத்திச் சொல்லி வந்தது. கோவிலூர் மடாலயத்தின் முதலாம் மடாதிபதியான அருளாட்சி செலுத்திய கோவிலூர் ஆண்டவர் என்று அழைக்கப்படும் முத்து ராமலிங்க ஞான தேசிகர் இப்பணியைத் தொடங்கினார். ஏராளமான சாதுக்கள் வேதாந்த நூற்பயிற்சி பெற்று பல்வேறு மடாலயங்களைத் தமிழகத்தில் தொடங்கினர். தங்களைத் கோவிலூர் மரபு என்று சொல்லிக் கொள்வதில் பெருமையடைந்தனர்.

இவ்வாறு வேதாந்தம் பயிலவந்த சாதுக்களின் எண்ணிக்கை அன்று மிக அதிகம். எனவே வேதாந்த நூல்கள் பலவற்றை எழுதிப் பதிப்பிக்கும் பணியில் திருமடம் ஈடுபட்டது. அவ்வாறு ஆண்டவரிடம் பயின்ற பலருள்ளும் கண்டனூரைச் சார்ந்த நாகலிங்கய்யா மிகவும் முதன்மையானவர். ஆண்டவரைப் பின்பற்றி அருமையான நூல்கள் பலவற்றையும் ஆக்கியவர் நாகலிங்கய்யா. அவருடைய அருமைபெருமைகளை அன்பர்கள் அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது என்ற எண்ணத்துடன் நாகலிங்கய்யா பற்றிய வரலாற்றுச் செய்திகளை அரிதின் முயன்று தொகுத்து அவர் எழுதிய நூல்களையும் ஆய்வு செய்து நூலாக்கி இருக்கிறார் கண்டனூரைச் சேர்ந்த பாரதிசந்திரன்.

புதுவயல் இராமநாதன் செட்டியார் மேல்நிலைப்பள்ளியில் நான் முதுகலைத் தமிழாசிரியராகப் பணிபுரிந்த காலத்தில் என்னிடத்தில் பயின்ற மாணாக்கன் பாரதிசந்திரன். ஆசிரியர் பால் மரியாதையும், அன்பும், தமிழார்வமும் அதிகம் பெற்று விளங்கியவர். அழகப்பர் பல்கலைக்கழகத்தில் தமிழ் உயர் ஆய்வு மையத்தில் சிற்றிதழ்களைப் பற்றித் திறம்பட்ட ஆய்வு செய்திகளோடு படைத்துத் தந்ததோடு நாகலிங்க ஐயாவின் பா நலத்தையும் பாராட்டி எழுதியுள்ள பாங்கு போற்றத் தக்கது.

என் மாணாக்கன் பாரதிசந்திரன் இன்னும் பல நூல்களை எழுதித் தமிழ் உலகில் புகழ் பெற்று வாழ அருளுமாறு என் வழிபடு தெய்வமான அன்னை மீனாட்சியின் மலரடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றேன்.

31, இராமசாமி செட்டியார் தெரு
பனந்தோப்பு
காரைக்குடி - 630 001

# அணிந்துரை

பேராசிரியர் சிவமாதவன்

தமிழ் இலக்கிய வரலாற்றில் 16 ஆம் நூற்றாண்டு தொடங்கி 20 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரை சிற்றிலக்கிய வகைகள் செல்வாக்குப் பெற்று விளங்கின. அக்காலப் புலவர் பெருமக்கள் தமிழ் வடமொழி இரண்டிலும் புலமை பெற்றவர்களாகவும் திகழ்ந்தனர். சமய உண்மைகளை நிலைநாட்டும் பொருட்டு புதிய நூல்களை எழுதியதுடன் சில வடமொழி நூல்களை மொழிபெயர்த்தும் அளித்தனர். சமயக் கருத்துக்களும், தத்துவக் கருத்துக்களும் பரவிட வேண்டும் என்ற ஆர்வத்தை அப்புலவர் பெருமக்களின் நூல்களில் காணமுடிகிறது.

இத்தகைய புலமை மரபில் வந்தவர்களுள் நகரத்தாரின் போற்றுதலுக்குரிய கண்டனூர் திரு. நாகலிங்கய்யா அவர்களும் ஒருவர். 19 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றி அந்நூற்றாண்டின் இறுதியில் இயற்கை எய்திய திரு. நாகலிங்கய்யா இறைப்பணியும் இலக்கியப்பணியும் புரிந்து புகழ்பெற்றவர். இராமேசுவரத்தில் உள்ள இராமநாத சுவாமி ஆலயத் திருச்சுற்றுமண்டபத்தை இவர் கட்டித் தந்தார். மேலும், அவ்வூரில் நிலம் வாங்கி நகர விடுதி யொன்றைக் கட்ட ஆரம்பித்த நிலையில் இவர் மறையவே இவரது மகனார் அவ்விடுதியைக் கட்டிமுடித்தார் என்னும் செய்தி குறிப்பிடத் தகுந்தது.

திரு. நாகலிங்கய்யா ஆறு நூல்கள் படைத்துள்ளார். அவற்றுள் சீவன் முக்திப் பிரகரணம், வாசுதேவ மனனம் என்னும் இரு நூல்களும் வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை. ஞான அந்தாதி, ஏதுசொரூபங்காரியம், ஆத்ம நாமம், பஞ்சகோசம் எனும் நான்கு நூல்களையும் இவர் தாமே எழுதி வெளியிட்டார். இந்த நான்கு நூல்களின் அமைப்பு, இவற்றில் இடம்பெற்றுள்ள அத்வைதக்கருத்துக்கள் இந்நூல்களின் இலக்கியச் சிறப்புகள் ஆகியவற்றை விரிவாக ஆராய்ந்து கூறுகிறது திரு பாரதிசந்திரன் அவர்களது நூல்.

கடந்த கால வரலாற்றின் எதிர்காலத் தலைமுறையினருக்கு எடுத்து மொழிவதும் அதன் நோக்கத்தை புரியவைப்பதும் இன்றைய நிலையில் இன்றியமையாத் தேவைகள் ஆகி விட்டன. அத்தகைய அரும்பணியை அன்பு இளவல் பாரதிசந்திரன் இந்நூலினை வெளியிடுவதன் மூலம் செய்துள்ளார்.

இளைய தலைமுறையினர் எளிதான பொருள் பற்றி நூல் எழுதவே விரும்புவர். ஆனால் சந்திரபாரதியோ இந்தியத் தத்துவ மரபில் கிளைத்துச் செழித்துப் பரவியிருந்த அத்வைதம் என்னும் தத்துவக் கொள்கையை அலசி ஆராயும் துணிவு மிக்கவராய் அதற்கேற்றவாறு அத்தத்துவ மரபில் ஆழ்ந்த புலமைமிக்கவராய் செயல்பட்டு மற்றவர்களிட மிருந்து வேறுபட்டுத் தனித்தன்மையுடன் திகழ்கின்றார்.

திரு. நாகலிங்கய்யாவின் நான்கு நூல்களில் இடம்பெறும் தத்துவக் கருத்துக்களை விளக்கியுரைக்கும் பகுதி சிறப் பானது. உயிர் குறித்தும், உலகு குறித்தும், இறைவன் குறித்தும், தத்துவ மரபில் பேசப்பட்டு வரும் கருத்துக்களே உள்வாங்கிக் கொண்டு அத்வைதம் இவை குறித்துக் கூறுவதைத் தக்க மேற்கோள்களுடன் எடுத்துக் காட்டி யுள்ளார். நூலாசிரியரின் இந்த மதிநுட்பத்தை பாராட்டி மகிழ் கிறேன். பயனுள்ள பணிகளை இளைஞர்கள் செய்தால்தான் வரும் தலைமுறையினரின் வழிகாட்டியாய் விளங்கமுடியும், நம் முன்னோர்கள் அப்படித்தான் வாழ்ந்து காட்டினார்கள். திரு. பாரதிசந்திரன் அவ்வழியே பின்பற்ற ஆரம்பித்துள்ளார். அவரது முயற்சி வெல்க என வாழ்த்துகிறேன். தமிழுலகிற்கு இந்நூல் புதிய வரவு. நாகலிங்கய்யா என்னும் மாமனிதரின் வாழ்வும் பணியும் இந்நூலின் மூலம் வெளி உலகிற்கு வருகின்றன. தமிழ் மக்கள் இந்நூலை ஏற்றுப் போற்றுவார்கள் என நம்புகிறேன்.

தாகூர் கலைக்கல்லூரி
புதுச்சேரி

# என்னுரை

இந்தியத் தத்துவ வரலாற்றில் அத்வைதத்தத்துவம் ஒரு மௌனப் புரட்சியைச் செய்து சமயச்சார்பாக சமூக மறு மலர்ச்சிக்கு வித்திட்டது. வடமொழயில் மட்டுமே எழுதப் பட்டு வந்த இத்தத்துவங்களைத் தமிழில் கொண்டு வரக் கோவிலூர் மடம் பெரும் முயற்சி எடுத்தது. அவ்வகையில் கோவிலூர் ஆண்டவரின் தலைமை மாணாக்கரான கண்டனூர் நாகலிங்கய்யா பல்வேறு வேதாந்த நூல்களை இயற்றினார். அவரின் வழி அத்வைதத் தத்துவத்தைக் காண்பது இந் நூலின் கருத்தாகும்.

நாகலிங்கய்யாவின் வழித்தோன்றலான டாக்டர் நாகப்பா நாச்சியப்பன் அவர்கள்தான் இத்துறைக்குள் எமை அழைத்துச் சென்ற பெருமைக்குரியவர். அவருக்கும் அவரது துணைவியாருக்கும் என் நன்றிகள்.

காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்தில் இளநிலை ஆய்வாளர் (M.Phil) பட்டத்திற்காய்ச் செய்யப்பெற்ற இவ்வாய்வு, கால முதிர்ச்சியால் பல மாற்றங்களுடன் நூலாக வெளி வருகின்றது. அத்வைதத் தத்துவத்தைச் சரியாகப் புரிந்து கொண்டவர் தவறு இழைப்பதற்கு வழியில்லை. அந்த அளவிற்கு மனத்தினைச் செம்மைப்படுத்தும் உயரிய தத்துவம் அது. உலக மக்கள் ஒருமைப்பாட்டுடன் வாழ, அத்வைதத் தத்துவம் பெருவழக்காக மாறி அனைவராலும் கடைபிடிக்கப்படவேண்டும் என்பதன் அடிப்படை முயற்சியே இந்நூல்.

இந்நூல் உருவாவதற்கு உதவிய அனைத்து நெஞ்சங்களுக்கும், கழகப் பதிப்பகத்தாருக்கும் நன்றிகள்.

அன்பன்

பாரதிசந்திரன்

(செ.சு.நா. சந்திரசேகரன்)

# நன்றி



தவத்திரு. நாச்சியப்ப சுவாமிகள்

காப்பியக் கவிஞர் நா. மீனவன்

முனைவர் இரா. பாலசுப்பிரமணியன்

முனைவர் மு. பாண்டி

முனைவர் பீ.மு. அபிபுல்லா

பேராசிரியர் சிவமாதவன்

முனைவர் இரா. கருணாநிதி

நா. இராமநாதன் செட்டியார்

சீ. விஜய்

தி. சிவப்பிரகாஷ்

கழகப் பதிப்பகத்தார்

ஸ்ரீதரன்



எங்கள் உயிருக்குள் கலந்து
என்றும் நினைவாலே
பரப்பிரம்மமாக வாழும் தெய்வத் தங்கை,

**விஜயலெட்சுமிக்கு...**

# அத்வைதி நாகலிங்கய்யாவின் வாழ்க்கை

செட்டிநாட்டுப் பகுதியில் வாழ்ந்த அறிஞர்கள் பலர். இவர்களில் பலர் இனங்காணப்பெற்று வரலாற்றில் இடம் பெற்றுள்ளனர். சிலர் இனம் காணப்பெறவில்லை. அவர்களுள் கண்டனூர் நாகலிங்கய்யாவும் ஒருவர். அவர் தமிழ்ப்பணியும், இறைப்பணியும் ஆற்றிய பெருமகனார். நிறைமொழி மாந்தரா கவும் வாழ்ந்தவர். அவருடைய வாழ்வையும், தமிழ்ப்பணி யையும், தத்துவக்கருத்துகளையும் இப்பகுதி விளக்குகிறது.

காரைக்குடியிலிருந்து பத்துக் கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது 'கண்டனூர்'. இது காரைக்குடியிலிருந்து அறந்தாங்கி செல்லும் பாதையில் அமைந்துள்ளது. 'கண்டன்' எனும் சோழமன்னன் இங்கு வந்து தங்கிச் சிவவழிபாடு செய்தமையால் இவ்வூர் 'கண்டனூர்' எனும் பெயர் பெற்றது. (1) தலபுராணவேந்தர் மீனாட்சிசுந்தரம்பிள்ளை எழுதிய 'வீரவனப் புராணம்' எனும் நூலில் 'சோழன் முக்தியடைந்த படலத்தில்' கண்டனூரின் பெயர்க்காரணம் பின்வருமாறு கூறப்படுகின்றது.

"அன்னவெம் கானம் முற்ற
அழிந்துமா நகர் உண்டாக்கிப்
பன்னமும் குடிகள் ஏற்றிப்
பல்வளங் களும் பொருந்தித்
தன்னமும் குறைவுறாத
தன்பெயர் விளங்கும் ஆற்றால்
கல்நவில் தடம்புயத்தான்
கண்டனூர் எனும் பேர் இட்டான்" (2)

அருணாச்சலக் கவிராயர், நாகலிங்கய்யா மீது "நாகலிங்க தேசிகர் பிள்ளைத்தமிழ்" எனும் நூலொன்று எழுதியுள்ளார். அந்நூலிலும் கண்டனூரின் சிறப்புக்கள் கூறப்பட்டுள்ளன. "மயிலாடுபல்வளத்தாற்பொலி கண்டனூர்" என்றும் "பொறையில் சிறந்தோர் உள்ள மகிழ்பூப்ப மாதம் மும்மாரி பொழியுங் கண்டனூர்" என்றும் சிறப்பிக்கப் பட்டுள்ளது. (3) கண்டனூர் முன்பு 'கண்டநல்லூர்' என்று அழைக்கப்பட்டு வந்திருக்கின்றது. இதைத் தமிழ்நூல் விவர அட்டவணை(4) கொண்டும், நாகலிங்கய்யா எழுதியுள்ள நூல்களின் மேல், ஊரின் பெயர் கண்டநல்லூர் என்று எழுதப்பட்டிருப்பது கொண்டும் தெளியலாம்.

### நாகலிங்கய்யாவின் பிறப்பு

கண்டனூரில் பெரும் செல்வந்தராகக் தனவைசியக் குலத்தில் பிறந்தவர் பெரியகருப்பன்செட்டியார். இவரது மனைவி சொர்ணவல்லி என்ற பொற்கொடியாள். இவர்கள் இருவரும் சைவத் தொண்டு செய்வதில் பெரும் நாட்டம் உடையவர்கள். 'சூரக்குடி' கோயிலைக் குலக்கோயிலாகக் கொண்ட மரபினர். கண்டனூர் அருள்மிகு சுந்தரேசுவரரைத் தினமும் வணங்கிச் சிறப்புற வாழ்ந்து வந்தவர்கள். இவர்களுக்கு மூன்றாவது மகனாகப் பிறந்தவர் நாகலிங்கம் ஆவார். அருணாச்சலம், இராமசாமி என்பவர்கள் நாகலிங்கத்திற்கு முன்பிறந்த இரண்டு மகன்கள் ஆவார்கள். இதுபற்றிய செய்தி 'நாகலிங்க தேசிகர்' பிள்ளைத் தமிழில் காணப்படுகின்றது. மூத்தவர் அருணாச்சலம், அடுத்ததாக இராமசாமி, கண்டசியாக நாகலிங்கம் ஆவார்கள். இதனை,

"காசிமா நகர் தனிற்
றங்குகதி பெற்றவருணா
சலதேசி கற்குஇளைய தம்பியென"(5)

என்ற பாடல் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. இப்பாடலில் இளைய தம்பியெனக் கூறுவது நாகலிங்கய்யாவையாகும்.

### இளமை வாழ்க்கை

அருணாச்சலம், நாகலிங்கம் இருவரும் தனவைசியர்களுக்கு உரிய தொழிலான வாணிபத் தொழிலை இளமையில்

செய்து பொருள் ஈட்டினர். அருணாச்சலம் தனது நண்பருடன் திருநெல்வேலியில் வாணிபம் செய்தார். இராமசாமி எங்கு வாணிபம் செய்து பொருளீட்டினர் என்பது தெரியவில்லை. நாகலிங்கம் திருநெல்வேலியில் அச்சியந்திரசாலை வைத்து நடத்தியதாகச் செவிவழிச் செய்தி மூலம் அறிகின்றோம். (6)

## அருணாச்சலய்யாவின் வாழ்வு

நாகலிங்கய்யாவின் தமையர் என்ற முறையிலும், கோவிலூர் ஆண்டவரிடம் நெருங்கிப் பழகியவர் என்ற நிலையிலும், பல அற்புதச் செயல்களை நடத்தியவர் என்பதாலும் இங்கு இவரைப் பற்றிக் காண்பது இன்றியமையாததாகும். அருணாச்சலய்யா தேவகோட்டை அருணாச்சலம் (துறவு சாமிகள்) என்பவருடன் நட்புக் கொண்டிருந்தார். இவர்கள் இருவரும் சேர்ந்து திருநெல்வேலியில் பலகாலம் வாணிபத்தொழில் செய்தனர். இருவரும் திட்டமிட்டுக் கோவிலூரரை அடைந்து, ஸ்ரீலஸ்ரீமுத்து ராமலிங்க ஆண்டவரைச் சரணடைந்து, மாணவர் ஆயினர். அன்றுமுதல் இருவரும் வீடுவாசலை மறந்தனர். பெற்றோரைத் துறந்தனர். ஆசிரியர் அருளால் அவரிடம் பஞ்சதசி, கைவல்யம், முதலிய வேதாந்த சாத்திரங்களைக் கற்றுத் தெளிந்தனர். திருப்பாதிப்புலியூர் முத்துச்சரவண சுவாமிகளிடம் மூவாயிரத்து இருநூறு (3,200) வாசிட்டம் கற்றனர். மிக்க விரக்தியினால் பரணிப்பிரபந்தம் என்னும் நூலும் பாடம் கேட்க விரும்பினர். அந்நூல் அவர்களுக்கு எங்கும் கிடைக்கவில்லை.

பரணிப்பிரபந்தம் எங்கே கிடைக்கும் என்ற விசாரணையில் அவர்கள் ஈடுபட்டனர். அப்பொழுது குன்றக்குடி ஆதினத்தின் முப்பத்தைந்தாவது பட்டத்து மடாதிபதியாக இருந்த ஸ்ரீலஸ்ரீஆறுமுகதேசிகரிடம் அந்நூலின் பிரதி ஒன்று இருப்பதை அறிந்து அவரிடம் சென்றனர். அவரை வணங்கி நூல் பிரதி வேண்டினர். அதற்கு அவர் "பரணி படித்துத் துறவு கொள்ளப் போகின்றீர்களோ" என்று வேடிக்கையாகக் கேட்டு, அந்நூலைக் கொடுத்து, ஆசி கூறி அனுப்பினார். இருவரும் பதில் பேசாது கோவிலூருக்குச் சென்றனர். ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க தேசிகரிடம் அந்நூலைக் கொடுத்துப் பாடம் கேட்டுத் தெளிந்தனர். விரைவில் துறவு பூண அவர்தம் உள்ளங்கள் துடித்தன. அதற்கேற்ற வாய்ப்பை அவர்கள் எதிர்பார்த்திருந்தனர்.

ஒருநாள் அவர்கள் தம் குருவிடம் பாடம் கேட்டு இரவு உணவு உண்டபின் அவரது திருவடிகளை வருடியவாறு இருந்த நேரத்தில் துறவுபூண அனுமதி கேட்டனர். அவரும் அதற்கு இசைந்து அனுமதி வழங்கினார். அவர்கள் அவ்வா ணையைத் தலைமேற்கொண்டு வணங்கிக் கொற்றவாளீர் ஆலயத்தினை அடைந்து வழிபட்டனர். தம் துறவு முற்றுப் பெற்று நன்கு விளங்க இறைவனையும் இறைவியையும் வேண்டினர். பிறகு நெடுங்குடி என்னும் ஊரில் ஆதிகுரு தட்சிணாமூர்த்தி சந்நிதியில் துறவு மேற்கொண்டு சிதம்பரம் சென்றனர்.

## சிதம்பர வாழ்க்கை

கண்டனூர் அருணாச்சல சுவாமிகளுக்குச் "சின்னத் துறவு ஆண்டவர்" என்ற பெயர் ஒன்றும் உண்டு. இதை

"அருணாச்சலமென்னு மியற்பெயர்
தன்னோடு துறவு
சாமியென்னும் பெயர் மேவு தயாநிதி
தம்பியெனுந் தகையோ." (7)

என்ற பாடல் மூலம் அறியலாம். கோட்டையூர் அருணாச்சல சுவாமிகளுக்குப் "பெரிய துறவு ஆண்டவர்" என்று பெயர். இவ்விருவரும் சிதம்பரம் ஈசானிய மடத்தில் நீண்ட காலம் தியானத்தில் இருந்தனர். ஆண்டுதோறும் கோவிலூரில் நடைபெறும் குருபூசை, திருநெல்லைஅம்மை திருவிழா ஆகியவற்றிற்குச் சென்று திரும்புவர்.

## துறவாண்டவர்களின் அற்புத நிகழ்ச்சிகள்

சிதம்பரத்தில், ஒருநாள் சுவாமிகளிருவரும் பிச்சை எடுக்கச் சென்றனர். கணிகையர் வீட்டு மாதர் ஒருத்தி, சுவாமி களின் உடல் தோற்றத்தில் மயங்கி, அவர்களை வீட்டிற்கு உள்ளே வந்து பிச்சை எடுத்துச் செல்லுமாறு கூறினாள். வீட்டிற்குள் சென்றதும், கணிகையவள் தவறாக நடந்து கொண்டாள். இதைச் சிறிதும் எதிர்பார்க்காத சுவாமிகள் உடனே அமர்ந்து தியானத்தில் ஈடுபட்டனர். இவர்களின் சந்நியாச விரதத்தைக் கண்டு வியந்து, கணிகையவள் இவர்கள் காலடியில் விழுந்து மன்னிப்புக் கேட்டாள்.

## இறைவன் உணவு தந்தது

சுவேதாரண்ய ஆலயத்தில் ஒருநாள் அர்த்தசாம தரிசனம் செய்து, தீர்த்தத்தில் இரண்டு கை நீரருந்தி குடவரையில் சிவபெருமானைச் சிந்தித்துக் கொண்டு நித்திரை செய்தார்கள். அன்று பிச்சை கிடைக்காது சோர்ந்து இருந்தனர். அப்போது அந்தணர் ஒருவர் சர்க்கரைப் பொங்கல் (அன்னம்) கொண்டு வந்து இருவருக்கும் கொடுத்தார். அதைப் பெற்றுத் தீர்த்தங் கரையில் வைத்து அதை உண்டு மீண்டும் நித்திரை செய்தனர். மறுநாள் காலை எழுந்து கடன்களை முடித்து, கோயிலுக்குள் சென்றனர். இரவு வந்த அதே அந்தணர் இவர்களைப் பார்த்து 'இரவு எங்கு தங்கியிருந்தீர்கள்' என்று கேட்டார். "நீங்கள் தானே எங்களுக்கு இரவு உணவு தந்தீர்கள்." என்று துறவுசாமிகள் கேட்டனர். அதற்கு அவர் "நான் இரவு வரவில்லை. அன்னமும் தரவில்லை" என்றார். அப்போதுதான் உணர்ந்தனர் இருவரும். இரவு வந்தது அந்த சிவபெருமானே என்று.

இவ்விதமாகத் தில்லையில் இருவரும் நீண்டநாள் வசித்து வந்தனர். ஒருநாள் நடராசப் பெருமான் சின்னத் துறவாண்டவர் கனவில் காட்சியளித்து, அவரைக் காசிக்குச் சென்று, கங்கையில் நீராடி விசுவநாதரை வழிபட ஆணையிட்டார். அங்ஙனமே அவர் பெரிய துறவாண்டவரிடமும் கோவிலூர் முத்துராமலிங்க ஆண்டவரிடமும் அறிவித்து விட்டுக் காசிக்குச் சென்றார்.

ஒருநாள் அவர் திருவாவடுதுறை மடத்து நமச்சிவாயத் தம்பிரானிடம் "குரோதி ஆண்டு ஆனிமாதம் 31ஆம் தேதி சுக்ரவாரம், பத்து நாழிகைக்கு இத்தேகத்து உயிர்மறையும் இதனை எனது குருநாதர் கோவிலூராண்டவருக்குத் தெரிவிக்கவும்" என்று கூறினார். நமச்சிவாய தம்பிரானும் அதற்கு இசைந்து இரண்ட அடியார்களை அவருக்குத் துணையாக அமர்த்தினார். சுவாமிகள் கூறியபடி அவரது உயிர் அவர் குறிப்பிட்ட நேரத்தில் மறைந்தது. உடனே அவரது பூத உடலைக் கல்தொட்டியில் அடக்கம் செய்து, கங்கையில் இறக்கிவிட்டுச் செய்தியைக் கோவிலூர் ஆண்டவருக்குப் பணிவாகக் கடிதத்தின் வாயிலாகத் தெரிவித்தார். (8)

ஒருநாள் அவர்கள் தம் குருவிடம் பாடம் கேட்டு இரவு உணவு உண்டபின் அவரது திருவடிகளை வருடியவாறு இருந்த நேரத்தில் துறவுபூண அனுமதி கேட்டனர். அவரும் அதற்கு இசைந்து அனுமதி வழங்கினார். அவர்கள் அவ்வா ணையைத் தலைமேற்கொண்டு வணங்கிக் கொற்றவாளீர் ஆலயத்தினை அடைந்து வழிபட்டனர். தம் துறவு முற்றுப் பெற்று நன்கு விளங்க இறைவனையும் இறைவியையும் வேண்டினர். பிறகு நெடுங்குடி என்னும் ஊரில் ஆதிகுரு தட்சிணாமூர்த்தி சந்நிதியில் துறவு மேற்கொண்டு சிதம்பரம் சென்றனர்.

## சிதம்பர வாழ்க்கை

கண்டனூர் அருணாச்சல சுவாமிகளுக்குச் "சின்னத் துறவு ஆண்டவர்" என்ற பெயர் ஒன்றும் உண்டு. இதை

"அருணாச்சலமென்னு மியற்பெயர்
தன்னோடு துறவு
சாமியென்னும் பெயர் மேவு தயாநிதி
தம்பியெனுந் தகையோ." (7)

என்ற பாடல் மூலம் அறியலாம். கோட்டையூர் அருணாச்சல சுவாமிகளுக்குப் "பெரிய துறவு ஆண்டவர்" என்று பெயர். இவ்விருவரும் சிதம்பரம் ஈசானிய மடத்தில் நீண்ட காலம் தியானத்தில் இருந்தனர். ஆண்டுதோறும் கோவிலூரில் நடைபெறும் குருபூசை, திருநெல்லைஅம்மை திருவிழா ஆகியவற்றிற்குச் சென்று திரும்புவர்.

## துறவாண்டவர்களின் அற்புத நிகழ்ச்சிகள்

சிதம்பரத்தில், ஒருநாள் சுவாமிகளிருவரும் பிச்சை எடுக்கச் சென்றனர். கணிகையர் வீட்டு மாதர் ஒருத்தி, சுவாமி களின் உடல் தோற்றத்தில் மயங்கி, அவர்களை வீட்டிற்கு உள்ளே வந்து பிச்சை எடுத்துச் செல்லுமாறு கூறினாள். வீட்டிற்குள் சென்றதும், கணிகையவள் தவறாக நடந்து கொண்டாள். இதைச் சிறிதும் எதிர்பார்க்காத சுவாமிகள் உடனே அமர்ந்து தியானத்தில் ஈடுபட்டனர். இவர்களின் சந்நியாச விரதத்தைக் கண்டு வியந்து, கணிகையவள் இவர்கள் காலடியில் விழுந்து மன்னிப்புக் கேட்டாள்.

## இறைவன் உணவு தந்தது

சுவேதாரண்ய ஆலயத்தில் ஒருநாள் அர்த்தசாம தரிசனம் செய்து, தீர்த்தத்தில் இரண்டு கை நீரருந்தி குடவரையில் சிவபெருமானைச் சிந்தித்துக் கொண்டு நித்திரை செய்தார்கள். அன்று பிச்சை கிடைக்காது சோர்ந்து இருந்தனர். அப்போது அந்தணர் ஒருவர் சர்க்கரைப் பொங்கல் (அன்னம்) கொண்டு வந்து இருவருக்கும் கொடுத்தார். அதைப் பெற்றுத் தீர்த்தங் கரையில் வைத்து அதை உண்டு மீண்டும் நித்திரை செய்தனர். மறுநாள் காலை எழுந்து கடன்களை முடித்து, கோயிலுக்குள் சென்றனர். இரவு வந்த அதே அந்தணர் இவர்களைப் பார்த்து 'இரவு எங்கு தங்கியிருந்தீர்கள்' என்று கேட்டார். "நீங்கள் தானே எங்களுக்கு இரவு உணவு தந்தீர்கள்." என்று துறவுசாமிகள் கேட்டனர். அதற்கு அவர் "நான் இரவு வரவில்லை. அன்னமும் தரவில்லை" என்றார். அப்போதுதான் உணர்ந்தனர் இருவரும். இரவு வந்தது அந்த சிவபெருமானே என்று.

இவ்விதமாகத் தில்லையில் இருவரும் நீண்டநாள் வசித்து வந்தனர். ஒருநாள் நடராசப் பெருமான் சின்னத் துறவாண்டவர் கனவில் காட்சியளித்து, அவரைக் காசிக்குச் சென்று, கங்கையில் நீராடி விசுவநாதரை வழிபட ஆணையிட்டார். அங்ஙனமே அவர் பெரிய துறவாண்டவரிடமும் கோவிலூர் முத்துராமலிங்க ஆண்டவரிடமும் அறிவித்து விட்டுக் காசிக்குச் சென்றார்.

ஒருநாள் அவர் திருவாவடுதுறை மடத்து நமச்சிவாயத் தம்பிரானிடம் "குரோதி ஆண்டு ஆனிமாதம் 31ஆம் தேதி சுக்ரவாரம், பத்து நாழிகைக்கு இத்தேகத்து உயிர்மறையும் இதனை எனது குருநாதர் கோவிலூராண்டவருக்குத் தெரிவிக்கவும்" என்று கூறினார். நமச்சிவாய தம்பிரானும் அதற்கு இசைந்து இரண்ட அடியார்களை அவருக்குத் துணையாக அமர்த்தினார். சுவாமிகள் கூறியபடி அவரது உயிர் அவர் குறிப்பிட்ட நேரத்தில் மறைந்தது. உடனே அவரது பூத உடலைக் கல்தொட்டியில் அடக்கம் செய்து, கங்கையில் இறக்கிவிட்டுச் செய்தியைக் கோவிலூர் ஆண்டவருக்குப் பணிவாகக் கடிதத்தின் வாயிலாகத் தெரிவித்தார். (8)

"காசிமாநகர் தனிற்
தங்குகதி பெற்ற அருணா
சல தேசிகர்"

என்ற பாடல் இவரின் இறுதிக்காலம் பற்றிய செய்தியினை உறுதிப்படுத்துகின்றது.

## நாகலிங்கய்யாவின் கல்வி

"குலகுருவாய் வணிகர்தவக் கொழுந்து தலையெடுப்ப
கூடு முத்துராமலிங்க குருவினுப தேசங்
கொண்டு கண்டனூர் வளரும் குன்றாயெழுந்த" (9)

என்ற பாடல், நாகலிங்கய்யாவின் குருநாதராக, கோவிலூர் ஆண்டவராகிய ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகர் இருந்திருக்கின்றார் என்பதை உணர்த்துகின்றது. கோவிலூர் ஆண்டவரை ஞானகுருவாய் ஏற்றுக்கொண்டு பலகலை களையும் வேதாந்த பாடங்களையும் கற்றார்.

"குற்றமே தாயினுமுறா துபலகலைகளுங்
கோவிலூர்க் குரு(வி)னருள் கை
கூட்டப் பயின்று நீ" (10)

என்ற பாடல் மூலமும்,

"கணக்கில் வேதாந் தக்கலையாங் கடலைக்
கடைந்து கருணைமணங்
கமழுஞ் சிவமா முதமுளங் கனிய
வெடுத்துக் கைவசஞ் செய்" (11)

என்ற பாடல் கொண்டும் நாகலிங்கய்யா வேதாந்த பாடம் முழுவதையும் கற்றிருக்கின்றார் என்று தெரியவருகின்றது. இவருடைய கல்வியின் திறத்தைக் கூறும் பொழுது,

"குறையாக்
கல்வி குறித்தாதி
சேடன்புகழும் நாகலிங்க சேயே" (12)

எனப் புகழ்ந்துரைக்கின்றார் அருணாசலக் கவிராயர். சைவ, வேதாந்தத் துறையைச் சேர்ந்தவர்கள் இவரைச் சுற்றியே இருப்பார்கள். கண்டனூரில் வேதாந்த மடம் கட்டியவுடன் அங்கு தினமும் வேதாந்த பாடம் சாதுக்களுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்டிருக்கின்றது. இதனை

"மெய்ஞானம்
வினையுநிலமே வருக அருள் வேதாந்
தர்களை மிகச் சேர்த்துப்
புரவுபூணும் பெருந்தகையே பொன்னே". (13)
"நீ செய்த
பாராயணஞ்செய் அடியார்
பயிலும் கூட மெங்கும்" (14)

*என்ற இப்பாடல்கள் வழித் தெளியலாம்.*

## நாகலிங்கய்யாவின் சீடர்கள்

*நாகலிங்கய்யாவின் சீடராக அவரது மகனார் முத்துராமலிங்கய்யா மற்றும் பழனியப்பச் செட்டியார், வீரப்பச் செட்டியார், சிவகாமிநாதபிள்ளை போன்றோர் இருந்திருக் கின்றனர் என்பதை "வாசுதேவர் மனனம்" என்ற நூலின் முன் காணப்படும் பாடல்கள் கூறுகின்றன. (15) அடியார்கள் பலர் இருக்கும் செய்தியினை,*

"அடியர்களின (அக)ங் மதயானைதனை ஞானஅங்குசத்தாற்
படிமிசையே செய்தருளு நாகலிங்க தேசிகனாம் பரமயோகி" (16)

"பார் நிறையடியருயத் தமிழ்க்கவியாற் பண்ணினன் கண்டனூர்ப் பதிவாழ்
தார் நிறைதோளானா கலிங்கப்பேர் தாங்கினேன் நீங்கிலாதவனே" (17)

*என இப்பாடல்கள் உணர்த்துகின்றன.*

## நாகலிங்கய்யா திருமணம்

*நாகலிங்கய்யா சிறிது காலம் இல்லற வாழ்வில் இருந்தார். இவருக்குத் தனவைசியர் முறைப்படித் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. நாகலிங்கய்யாவின் துணைவியார் பெயரை அறிய முடியவில்லை. இவர்களுக்கு முத்துராம லிங்கம், பெரிய கருப்பன் என்று இரண்டு மகன்கள் இருந்தார்கள். முத்துராமலிங்கம் தந்தையைப் போன்று சிறந்த புலவராகத் திகழ்ந்தார். நாகலிங்கய்யாவைக் குருவாகக் கொண்டு கல்வி பயின்றார். நிறைய நூல்கள் இயற்றித் தந்திருக்கின்றார். நாகலிங்கய்யா சிறிது கால இல்வாழ்க் கைக்குப் பின் துறவு வாழ்வுதனை மேற்கொண்டார்.*

நாகலிங்கய்யாவின் இறைப்பணி

இவரின் இறைத்தொண்டும் குறிப்பிடத்தக்கதாகும். "நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் திருக்கோயில்களுக்குத் திருப்பணி செய்வதில் பெரும் விருப்பமுடையவர்கள். இவர் களைப் போலத் தாங்கள் தேடிய பொருளைக் கோயிலுக்கும் கோயிலைச் சேர்ந்த நிறுவனங்களுக்கும், கோயிற் கலை களுக்கும் செலவிட்டோர் எவரும் இரார். தொழில்செய்யும் போது, தெய்வங்களுக்கு என்று பங்கு வைத்து அதனால் வரும் வருமானத்தை நெடுகலும் அறம் செய்யும் பாங்குடையவர்கள் நகரத்தார்கள்" (18) என்பதற்கிணங்க நாகலிங்கய்யா இறைப் பணிக்காகப் பெரும் பொருளைச் செலவு செய்துள்ளார்.

நாகலிங்கய்யா, தமது குலக்கோயிலான சூரக்குடி நகரச் சிவன் கோயிலை முதன்முதலில் திருப்பணி செய்துள்ளார். சூரக்குடி கோயில், முன்பு மிகவும் சிறிய கோயிலாக இருந்திருக்கின்றது. அதை முழுவதுமாக தமது பொருட் செலவிலேயே பெரிதாகக் கட்டியிருக்கின்றார். இதைத்

"தொன்மையாம் கர்னாபுரி சூரைநகர்தனிற்

சூள் திருப்பணிகள் செய்தும்" (19)

என்ற பாடல் மெய்பிக்கும். நாகலிங்கய்யாவின் மகனார் முத்துராமலிங்கய்யாவும் இக்கோயிலில் திருப்பணி செய்துள் ளார். இக்கோயில் 1898ல் முதன்முதலாகக் குடமுழுக்குச் செய்யப்பட்டுள்ளது. இக்குடமுழுக்கு விழாமலரை முத்துராம லிங்கய்யா இயற்றித் தந்துள்ளார்.

நாகலிங்கய்யா இராமேசுவரம் சிவன்கோயிலில் ஒரு திருச்சுற்று மண்டபத்தைக் கட்டித் தந்திருக்கின்றார் என்று நாகலிங்கய்யா வழிவந்த பேரா. நாகப்பா நாச்சியப்பன் அவர்கள் கூறுகின்றார். (20)

இராமேசுவரத்தில் காணப்படும் நகரத்தார் நகரவிடுதிக் காக நாகலிங்கய்யா அவர்கள் முதன்முதலில் நிலம் வாங்கி னார்கள். அந்நிலத்தில் நகரவிடுதியை மிகுந்த பொருட் செலவில் கட்ட ஆரம்பித்தார். அக்கட்டிடத்தை அவரது மகனாரே நிறைவுசெய்து வைத்தார். நகரவிடுதியின் நிலம் இன்றும் முத்துராமலிங்கய்யா பெயரிலேயே இருக்கின்றது என்பர் நா. இராமனாதன் செட்டியார். (21)

நாகலிங்கய்யா கோயில்களுக்குச் சென்று வழிபாடு செய்வதில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார். இச்செய்தியை,

“காரைக்கொடி மாடந்தொடு சீர்கல்லாங்
குடியும் வணிகர் குலக்
கண்ணாய் ஞானச் சுடரொளியைக் காணு
நீவாழிந் நகருஞ்
சூரைக் குடியுமெனப் புலவர் சொலுமுத்
தலத்துந் தொழுது நிதஞ்
சுத்தபரமாத் துவிதர்களுந் தொண்டு
புரிந்து சூழ்வர நீ” (22)

என்ற பாடல் விளக்கமாகக் கூறுகின்றது. தினந்தோறும் காரைக்குடி, கல்லாங்குடி, சூரக்குடிச் சிவன் கோயில்களைத் தொழுது பின் பரமாத்துவிதர்களுக்குத் தொண்டுபுரிந்து, தம் கடமைகள் மூலம் தன்னைக் கண்டு கொண்டார்.

நாகலிங்கய்யா அகத்துறவு, புறத்துறவு ஆகிய இரு நெறிகளிலும் சிறிதும் பிறழாது வாழ்ந்து வந்தவராவார். இவரது ஞானநெறியினைக் கண்டவர்கள் சுவாமிகளின் அடியவர்களாகச் சேர்ந்தனர். கண்டனூர் சின்னத்துரை சுவாமிகள் இவரது சிறந்த அடியார்களில் ஒருவராவார். இவர் சிதம்பரம் ஈசானியமடத்தில் தங்கியிருந்து கோயிலின் வடக்குக் கோபுரத்தில் மனன தியாநாதிகளைச் செய்து வாழ்ந்து வந்தவர். சின்னத்துறவு ஆண்டவரிடம் நெருங்கிய அன்பு கொண்டிருந்தவர். சின்னத்துறவு ஆண்டவர் முக்தி அடைந்ததும், கண்டனூர் வந்து நாகலிங்கய்யாவின் சீடராக மாறினார். இதனை நாகலிங்கய்யா மடத்திலுள்ள இவரது ஓவியம் கொண்டு அறிய முடிகின்றது.

முத்துராமலிங்கய்யா நாகலிங்கய்யாவின் சீடர்களில் ஒருவர் ஆவார். இதை ‘மாக்த்ம சரிதாமிருதம்’ என்ற நூலில்

“சிந்மய தாங்குணச் செல்வரிவரேயெனச்
செகமெலாம் பரவ நின்றுஞ்
சிரவணம நநாதி சீடருக் கொழியாது
செப்பியுங் கடைய னேனைத்
திருவடிக் கடிமையாய்ச் செய் நாகலிங்க குரு
தேசிகனான வெந்தை” (23)

என்று அவரே கூறுகின்றார்.

**கண்டனூர் வேதாந்த மடம்**

*கண்டனூரில் நாகலிங்கய்யா தம் காலத்தில் வேதாந்த மடம் ஒன்றைத் தோற்றுவித்தார். அதை மக்கள் அனை வருக்கும் வேதாந்த பாடம் கேட்கும் இடமாக மாற்றினார். சாதுக்களைக் கொண்டு வேதாந்தங்களை எடுத்துக்கூறும்படிச் செய்தார். இம்மடமானது ஏறக்குறைய 120 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டதாகும். இது குறித்து முத்துராமலிங்கய்யா தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். இம்மடம் கட்டிய நாள் குறித்து அதில் கூறும்பொழுது,*

"மன்னும் வெகுதானியா வருடமுறும் வைகாசிமாத மிருபத்து நாலோ
டுன்னு தேதியினிலே நாகலிங்கையன் மெய்யுரமான அடியார்களு
மின்னு நற்செல்வ வைங்கரனி ருக்கின்றதோர் வேதாந்த மடமியற்றிப்
பன்னுகிர கப்பிரவேசமது செய்துதன பதியாயிருந் தனர்களே" (24)

*என்றும்,*

"அண்டர்கள் பரவும் கண்டனூரதனி அருள் வடிவா கவேமடத்தில்
வண்டமிழ் நாகலிங்க தேசிகனை வணங்கி முப்போதும்
வாழ்ந்திடுவோம்"

*என்றும் கூறியிருக்கின்றார். நாகலிங்கய்யா முக்தி அடைந்த வுடன் இம்மடத்திலேயே அடக்கம் செய்யப்பட்டார். அடக்கத் தின்மேல் சமாதிலிங்கம் வைக்கப்பெற்றுக் கட்டப்பட்டுள்ளது. கருவறையின் மேல் விமானம் எழுப்பப்பட்டுள்ளது.*

*நாகலிங்கய்யா முக்தியடைந்த பிறகு முத்துராம லிங்கய்யா மடத்தை நிருவாகம் செய்து வந்தார். சாதுக்கள் பலர் இங்கு தங்கியிருந்து வேதாந்த பாடம் கற்றுள்ளனர். முத்துராமலிங்கய்யா பெரும் வணிகர்களிடம் இம்மடத்திற் காகப் பணம் பெற்று அதை, மடத்தின் பூசை மற்றும் நிர்வாகத்திற்காக வங்கியில் போட்டு வைத்துள்ளார். (26)*

*முத்துராமலிங்கய்யா தனது இறுதிக்காலம் பற்றிய சிந்தனை வந்தவுடன் தன் அடியார்களிடம், "தன் உடலை நாகலிங்கய்யா வின் சமாதிக்கு எதிராக, நந்திக்கு அடியில் ஒடுக்கம் செய்யுங்கள்" என்று கூறினார். அதன்படி அவர் முக்தியடைந்ததும் நந்திக்கு அடியில் ஒடுக்கம் செய்தனர்.*

*கண்டனூரிலுள்ள மடத்தின் கருவறைச் சுவரில் ஒரு அடியாரின் சிலை ஒன்று காணப் படுகின்றது. அது கோவிலூர் ஆண்டவரின் சிலையாகும். (27) சுவரின் மேல் சின்னத்துரை சுவாமிகளின் உருவமும், சின்னத்துறவு சுவாமி களின் உருவமும் ஓவியமாகத் தீட்டப் பட்டுள்ளன.*

'சீவன்முக்திப்பிரகரணம்' என்ற நூலுக்குப் பாயிரம் எழுதிய அடியார் ஒருவர் இம்மடம் பற்றிய செய்தியினைக் கூறியுள்ளார். இதனை

"மண்ணிற் பெரியோர் வசிப்பதற்கிடமாய்
வேதாந்த ஞானமடமும் வியப்புடன்
ஆதாரமதாய் அமைந்த அருளிறை" (28)

என்ற பாடல் மூலம் அறியலாம்.

### 'யோகி' பட்டம்

நாகலிங்கய்யாவிற்கு, அவரது சீடர்களாலும் மக்களாலும் 'யோகி' என்ற பட்டம் வழங்கப் பெற்றிருக்கின்றது. இலக்கண, இலக்கியத்திறமை கொண்ட அவருக்கு 'அய்யா' என்ற பட்டமும், அவரின் அரும்செயல்களைக் கருத்தில் கொண்டு 'யோகி' எனும் பட்டமும், வழங்கப்பட்டிருக்கின்றன. இதை

"கண்டனூர் மேவு ஞானபாவலனா நாகலிங்க யோகியுமே
பாடலாய்ப் பணிந்தான் மாதோ" (29)

"படிமிசையே செய்தருளு நாகலிங்க தேசிகனாம் பரமயோகி" (30)

என்ற பாடல் கொண்டு அறியலாம்.

### வாக்குக் பலிக்கும் திறன்

நாகலிங்கய்யாவிடம் ஆசிபெற வரும் மக்கள் தங்களின் குறைகளையும், தேவைகளையும் கூறுவர். முக்காலமும் உணர்ந்த பரமயோகியான நாகலிங்கய்யா நேரே பார்த்தவாறு எதிர்காலத்தில் நடக்கவிருப்பதை அறிந்து தேவையானவற்றை மட்டும் கூறி ஆசி வழங்குவார். இவரிடம் இருக்கும் இந்த அற்புத ஆற்றலால் குறைகள் நீங்கப்பெற்று, தன் வாழ்க்கையைச் செம்மையாக அமைத்துக் கொண்டவர்கள் பலராவர். மக்களோடு மக்களாக வாழ்ந்து அவர்களை நல்வழிப்படுத்த வந்த மாபெரும் ஞானியாக வாழ்ந்திருக்கின்றார். இவரின் எளிமையையும், தத்துவார்த்தச் சொற்பொழிவுகளும், மக்களை வெகுவாகக் கவர்ந்து இவரிடம் சீடர்களாக ஆக்கியது.

## அற்புத நிகழ்ச்சி

நாகலிங்கய்யா மடத்தில் பூசை வழிபாடுகள் செய்யும் அன்பர் பலமுறை கோயிலுக்குள் சமாதியின் மேல் நாகப் பாம்பு இருப்பதைக் கண்டிருக்கின்றார். பார்த்த கொஞ்ச நேரத்தில் பாம்பு காணாமல் போய்விடுகின்றது. நாகலிங்கய் யாவின் பாம்பு வடிவில் வந்து உலவிச் செல்லுகின்றார் என்பது மக்களின் நம்பிக்கையாகும்.

நாகலிங்கய்யாவின் குருபூசை முன்பு வெகு சிறப்பாக நடந்துள்ளது. கோவிலூர் சுவாமிகள் முன்பு இங்கு வந்து குருபூசையில் கலந்து கொண்டு செல்வார்கள். "சித்ரா பௌர்ணமி" தினத்தில் நாகலிங்கய்யாவிற்குக் குருபூசை போடப்படுகின்றது. காலையும், இரவும் சிறப்புப்பூசைகள் செய்யப்படுகின்றன.

## முக்தியடைந்தது

வேதாந்த நூல்கள் பல படைத்த கண்டனூர் நாகலிங்கய்யா பிறந்த தினம் பற்றிய செய்திகள் கிடைத்தில. இவரின் முக்தியடைந்த காலம் குறித்து மகாத்ம சரிதாமிருதம் எனும் நூலும், ஸ்ரீவீரசேகர பிள்ளைத்தமிழும் கூறுகின்றன.

அருணாச்சல சுவாமிகள் (சின்னத்துறவு ஆண்டவர்) 1845 ஆம் ஆண்டு அதாவது கலிவருடம் 4945 ஆம் ஆண்டு குரோதித் தமிழ் வருடம் ஆனி மாதம் 31ஆம் தேதி வெள்ளிக்கிழமை துவாதசி திதியில் ரோகினி நட்சத்திரத்தில் முக்தி அடைந்தார். (31) நாகலிங்கய்யா அவர்கள் 1895 ஆம் ஆண்டு, அதாவது கலிவருடம் 4995 ஆம் ஆண்டு விசய வருடத்தில் சித்திரை மாதத்தில் பௌர்ணமி நட்சத்திரத்தில் இப்பூவுலகை விட்டு முக்தி அடைந்தார்.

## நாகலிங்கய்யா எழுதிய நூல்கள்

கண்டனூர் நாகலிங்கய்யா தமிழில் வேதாந்த நூல்கள் நான்கு எழுதியுள்ளார். வடமொழியிலிருந்து இரண்டு நூல் களைத் தமிழ்ப்படுத்தியுள்ளார். இவை தவிர 'முத்துராமலிங்க சுவாமிகள் பாசுரம்' என்ற நூலும், நால்வர் துதி என்ற நூலும் எழுதப் பெற்றுள்ளன.

'முத்துராமலிங்க சுவாமிகள் பாசுரம்' என்ற நூல் 1894ல் அச்சிடப் பெற்றது. தனது ஞானாச்சாரியார் மீது பாடப்பட்ட இப்பாடல்கள் இவரது குரு பக்தியினைக் காட்டுகின்றன. இந்நூலில் 18 செய்யுள்கள் உள்ளன. திருநெல்வேலி "யூனியன் சென்றல்பிரஸ்" மூலம் பதிப்பிக்கப் பெற்றிருக்கின்றது. இந்நூல் வேதாந்த சிரவணோப தேசாநுட்டான சீலசமாதி வைபவங் களை அமைத்துச் செய்த பாசுரங்களால் ஆனது.

'நால்வர் துதி' - 1898 ஆம் ஆண்டு அச்சிடப்பட்டது. சைவ சமயாசாரியர் நால்வரையும் துதிப்பதோடு அவர்களின் வயது, அவர்கள் முக்தியடைந்த நாள் ஆகியன கூறப்படுகின்றன. எட்டே செய்யுள்களினால் ஆனது. திருவெண்காடு ஆறுமுக சுவாமிகள் இந்நூலைப் பதிப்பித்திருக்கின்றார்.

"ஆத்ம நாமம்" - எனும் நூல் 1876 ஆம் ஆண்டு வித்தி பானுபாலன யந்திரசாலையில் அச்சிடப்பட்டு வெளியிடப் பட்டது. இந்நூல் 59 செய்யுள்களை உடையது ஒவ்வொரு பாடலுக்கும் தக்க தலைப்புக்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன.

"ஏது சொரூபங்காரியம்" - மேற்படி அச்சகத்திலேயே அச்சிடப்பட்டு 1876ல் வெளியிடப்பட்டது. 50 செய்யுள்களால் ஆனது இந்நூலாகும்.

"ஞான அந்தாதி" - என்ற நூல் அய்யாவின் மிகச்சிறந்த நூல்களில் ஒன்றாகும். 1876ல் பதிப்பிக்கப்பட்ட இந்த நூல் 103 செய்யுள்களை உடையதாக உள்ளது. வித்தியானுபாலன யந்திரசாலையில் அச்சிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலுக்கும் தக்க தலைப்புக்கள் தரப்பட்டிருக்கின்றன. இந்நூல் கோவிலூர் சாதுக்களில் ஒருவராகிய சொரூபானந்த சுவாமிகள் விரும்பிப் படிக்கும் நூல்களில் ஒன்றாகும்.

"பஞ்ச கோசம்" - 50 செய்யுள்களைக் கொண்டதொரு நூலாகும். இதுவும் 1876ல் தான் பதிப்பிக்கப் பட்டிருக்கின்றது.

"பஞ்சதசப் பிரகரணம் - என்ற நூல் ஒரு மொழி பெயர்ப்பு நூலாகும். சங்கராச்சாரியர் மரபில் வந்த வித்யராண்ய சுவாமிகள் வடமொழியில் செய்த நூலின் மொழிபெயர்ப்பு இந்நூலாகும். 15 அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டு மொழிபெயர்ப்புச் செய்துள்ளார். 1869ல் எழுதி அச்சாக்கம் செய்யப்பட்டது. புதுக்கோட்டை சொக்கலிங்கக் கவிராயர், தச்சநல்லூர் முத்தழகப்பிள்ளை என்புவரும் சேர்ந்து



இந்நூலைப் பதிப்பித்து இருக்கின்றார்கள். திருநெல்வேலி முத்தமிழாகர அச்சுக்கூடத்தில் அச்சாக்கப்பட்டது.

"வாசுதேவ மனனம்" - இதுவும் ஒரு மொழிபெயர்ப்பு நூலாகும். 1882ல் பதிப்பிக்கப்பட்ட இந்நூல் 611 செய்யுள்களைக் கொண்டு காணப்படுகின்றது. 23 அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டு கூறப்பட்டுள்ளன. வடமொழி நூலின் மொழிபெயர்ப்பே இந்நூலாகும்.

நாகலிங்க தேசிகர் பிள்ளைத் தமிழ் என்ற நூலைப் பாடிய அருணாச்சலக் கவிராயர், மூன்று நூல்களை நாகலிங்கய்யா இயற்றியுள்ளதாகக் கூறியுள்ளார். அப்பாடல்களானவை,

"தண்டமிழ்க் கவிகளாற் பஞ்
சதப்ர கரணமொரு வாசுதேவ மனனஞ்
சங்கைசிறி தேனுமில்லா
துற்றதோர் சீவன்முத் திப்பிரகரணமென்ன
வொருமூன்று நூலுமேற்கோ
ளுதாரணங் காரண நியாயம் புலப்பட
வொழுங்குறப் பாடி" (31)
"பேரும் பெரிதாஞ் சீவன்முத்திப் பிரக
ரணமா திய மெய்யே
பிறங்கு நூல்செய் பேரறிவாற் பிறவிக்" (32)

"பஞ்சதசப் பிரகரணமு ரைத்தெழு கவியிறையே" (33)

என்று நாகலிங்கய்யா இயற்றிய நூல்களில் மூன்றைக் குறிப்பிட்டுக் கூறிச் செல்லுகின்றார். மேலும் நூலின் தன்மையைப் பற்றிக் கூறும்பொழுது,

"ஐயமா தியவகல வீரைந்து குற்றமு மகற்றியீ ரைவனப்பு
மான்றபதி னாறிரண் டுத்தியோ டேழ்மதமு மமைதரும் சுவைதருஞ் சீர்ச்
செய்யதமி ழால்வாசு தேவமன னஞ்செய்தோன் சிறுதே
ருருட்டியருளே" (34)

என்று கூறுகின்றார்.

## அடிக்குறிப்புக்கள்

1. அரா. சிங்கார வடிவேலன். "கண்டனூர் அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் கும்பாபிடேக மலர்" (13.1.92) ப - 9.

2. மீனாட்சி சுந்தரம் பிள்ளை. 'வீரவனப்புராணம்' சோழன் முக்தியடைந்த படலம் - பா-22
3. அருணாச்சலக் கவிராயர், 'நாகலிங்க தேசிகர் பிள்ளைத் தமிழ்,' காப்புப் பருவம் - பா - 1,2
4. வெ. கண்ணையன் (பொ.ப.ஆ) 'தமிழ் நூல் விவர அட்டவணை' ப- 95
5. அருணாச்சலக் கவிராயர், 'நாகலிங்க தேசிகர் பிள்ளைத் தமிழ்' ப - 28.
6. பேட்டி சொரூபாநந்த சுவாமிகள். கோவிலூர் மடம் நாள் - 18.2.98
7. அருணாச்சலக் கவிராயர் 'நாகலிங்க தேசிகர் பிள்ளைத்தமிழ்' ப - 28.
8. அரு. சோமசுந்தரன். 'கோவிலூர் ஸ்ரீலஸ்ரீதுறவு ஆண்டவர் என வழங்கும் ஸ்ரீலஸ்ரீ அருணாச்சல ஞான தேசிகரவர்களின் சரிதமும் பிள்ளைத் தமிழும்' பக் - 11-13.
9. அருணாச்சலக் கவிராயர் 'நாகலிங்க தேசிகர் பிள்ளைத்தமிழ்' காப்புப் பருவம் - பா - 4.
10. மேல்து, 'முத்தப்பருவம்' பா - 3
11. மேலது, 'வருகைப்பருவம்' பா - 4
12. மேலது, 'சிற்றில் பருவம்' பா - 2
13. மேலது, 'வருகைப்பருவம்' பா - 5
14. மேலது, 'சிறுபறைப் பருவம்' பா - 1
15. நாகலிங்கய்யா, 'வாசுதேவர் மனனம்' பக் - 6-7-8
16. மேலது, பழநியப்பச் செட்டியார் எழுதிய பாயிரம்
17. மேலது, சிவகாமிநாதபிள்ளை எழுதிய பாயிரம்
18. தே. சொக்கலிங்கம், 'நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு' ப - 1
19. ஸ்ரீ காசிகாநந்த சுவாமிகள், 'மகாத்ம சரிதாமிருதம்', ப - 200
20. பேட்டி. பேரா. நாகப்பா நாச்சியப்பன், நாள் - 10.3.98 இடம் - கண்டனூர்
21. பேட்டி. நா. இராமநாதன் செட்டியார், நாள் - 10.3.98 இடம் - கண்டனூர்
22. அருணாச்சலக் கவிராயர், 'நாகலிங்க தேசிகர் பிள்ளைத்தமிழ்' சிற்றில் பருவம் பா - 2.
23. ஸ்ரீகாசிகாநந்த சுவாமிகள், 'மகாத்ம சரிதாமிருதம்' ப - 200
24. முத்துராமலிங்கய்யா - கும்பாபிடேகத் திரட்டு - ப. 2
25. மேலது, - ப - 1

26. பேட்டி. பேரா. நாகப்பா நாச்சியப்பன். நாள் - 7.8.98 இடம் - கண்டனூர்
27. மேலது,
28. நாகலிங்கய்யா, 'சீவன் முக்திப் பிரகரணம்' பா - 6.
29. அருணாச்சலக் கவிராயர், 'நாகலிங்கதேசிகர் பிள்ளைத் தமிழ்', ப - 7.
30. மேலது, ப - 7.
31. மேலது, 'முத்தப் பருவம்', பா - 3.
32. மேலது, 'சிற்றில் பருவம்', பா - 4.
33. மேலது, 'சிறுபறைப் பருவம்', பா -5
34. மேலது, 'சிறுதேர்ப் பருவம்', பா - 5.



## அத்வைதப் படைப்புகள்

கண்டனூர் நாகலிங்கய்யா, அத்வைதத் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு நூல்கள் எழுதினார். வேதாந்த மடத்தைக் கண்டனூரில் நிறுவி வேதாந்தத்தை மக்களுக்குப் போதித்தவர். சிற்றிலக்கிய நூல்களை இயற்றி வேதாந்த நூல்களுக்குப் புகழ் சேர்த்தவர். அவருடைய நூல்களின் வரலாறு, வகைமை, அமைப்பு போன்றவை இங்கு ஆராயப் பெறுகின்றன.

### ஞானவந்தாதி

ஞானஅந்தாதி நூல் முழுமையாக ஞானம் என்பது குறித்துக் கூறுகின்றது. பொருள்கள் அவற்றின் இயக்கங்கள் பற்றியது அறிவு. பொருள்களுக்கும் அவற்றின் இயக்கங் களுக்கும் அப்பாற்பட்ட பிரமத்தைப் பற்றியது ஞானம் என முண்டக உபநிடதம் கூறுகின்றது. ஞானம் உயர்ந்த பிரம்மத்தைக் காட்டுகின்றது. எனவே ஞானத்தை அறிந்து கொள்வது இன்றியமையாதது என்ற தத்துவத்தில் இந்நூல் படைக்கப்பட்டுள்ளது.

### நூல்வரலாறு

கோவிலூர்ஆண்டவர் என்றழைக்கப்படும் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகர் கோவிலூர் மடத்தின் முதல் மடாதிபதி ஆவார். இவரிடம் நாகலிங்கய்யா சீடராகச் சேர்ந்து வேதாந்தப் பாடங்களைக் கற்றார். தன் குருவின் மீது அளவிலா பக்தி கொண்டவர். கோவிலூர் ஆண்டவர் "சுவாநுபவத் திருவாக்கு" என்ற நூலில் அனுபவ ஞானம்

பெறுவதற்காகச் "சுவாநுபவத் திருவாக்குகள்" என்ற தலைப்பில் எண்பத்தியொரு திருவாக்குகளை மலர்ந்தருளியுள்ளார். இவை அனைத்தும் வேதவாக்கியங்களின் சாரமாக இருப்பதினால் இதையே ஒரு நூலாகப் பாட வேண்டுமென "ஞானஅந்தாதி" நூலைப் படைத்தார். குரு எழுதிய ஒவ்வொரு திருவாக்குகளையும் ஒவ்வொரு பாடலின் தலைப்பாகக் கொண்டு நூல் எழுதப் பெற்றுள்ளது.

## அந்தாதி இலக்கிய வகைமை

சிற்றிலக்கிய வகை தொண்ணூற்றாறில் மிகவும் தொன்மையானது அந்தாதி இலக்கியமாகும். தொல்காப்பியர் செய்யுளியலில், "விருந்தே தானும் புகுவது கிளந்த யாப்பின் மேற்றே" (1) என்று அந்தாதிப் பிரபந்த இலக்கணத்தைக் கோடிட்டுக் காட்டியுள்ளார். யாப்பெருங்கலக்காரிகை, "அந்த முதலாத் தொடுப்பது அந்தாதி" (2) என வரையறுத்துள்ளது.

முதல் செய்யுளின் இறுதி அடி அல்லது சொல் அல்லது சீர், அடுத்த செய்யுளின் முதலாக அமையும். இது அந்தாதியின் இலக்கணமாகும். "மனிதமனம் எது நல்லதோ அதனை எப்போதும் தன்னுள் அடக்கி வைத்துக் கொள்ள வேண்டும் என்று விரும்புவது அதன் இயல்பு. மக்களின் இயல்பாகிய அந்த விருப்பத்தை நிறைவேற்ற உருவாக்கப் பட்டதுதான் அந்தாதி இலக்கியம்" (3) என்பர் மு. இராமசாமி.

தொடர்ச்சியாக வருவது எதுவோ, அது உள்ளத்தில் எளிமையாகத் தங்கிக் கொள்ளும். அந்தாதி இலக்கியம் ஒன்றை ஒன்று சொல்லாலோ, பொருளாலோ தொடர்ந்து வருகின்ற செய்யுட்களைக் கொண்டதலால் சிறப்புடைய இலக்கியமாகக் கருதப்படுகின்றது. ஞானஅந்தாதி நூல் இவ்விலக்கிய வகைமையில் எழுதப்பட்டுள்ளது. அந்தாதியில் ஞானம் குறித்துப் பாடியமையால், நூற்பெயரும் ஞான அந்தாதியென வைக்கப்பட்டுள்ளது.

## நூலமைப்பு

ஞான அந்தாதியில் முதற்கண், தாம் எடுத்துக் கொண்டிருக்கின்ற செயல் இனிது முடியவும், அது சிறப்புற அமையவும் வேண்டி, கண்டநல்லூர் செல்வவிநாயகரைத்

துதிக்கின்றார். அடுத்துத் தன் குருவான ஸ்ரீலஸ்ரீமுத்துராமலிங்க ஞானதேசிகருக்கு வணக்கம் கூறி அதன்பின் அவையடக்கப் பாடலொன்றைப் பாடியுள்ளார். இவை மூன்றும் பாயிரமாகக் கூறப் பெற்றுள்ளன. அவையடக்கம் என்பது தம் நூலில் ஏதேனும் தவறுகள் இருந்தால், அறிவில் பெரியோர்கள் அதைப் பொருத்தருள வேண்டும் எனக் கேட்பது ஆகும். அவையடக்கம் என்பதற்கு "ஒருவர் தாஞ்செய்த நூலிலே குற்றம் ஏற்றாதபடி கற்றோரை வழிபட்டடக்குதல், சபையோர் முன் அடங்கி நிற்றல்" எனத் தமிழ்ச் சொல்லகராதியும், சபையோர்க்கு வழிபடு கிளவி கூறுகை என்று தமிழகராதியும் பொருள் உரைக்கின்றன. நாகலிங்கய்யா தம் நூல்களில் அவையடக்கப் பாடலைப் பாடியது கொண்டு, அவரின் தன்னடக்கம் வெளிப்படுகின்றது.

நான்காம் பாடல் முதல் எண்பத்தியென்றாம் பாடல் வரை ஞானம் குறித்த அத்வைதத் தத்துவங்கள் கூறப்படு கின்றன. ஒவ்வொரு பாடலின் முன்னும் தலைப்புக்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன. எண்பத்தி இரண்டாம் பாடல் வாக்கியத்தின் அளவு கூறுகின்றது. பின்னுள்ள பதினெந்து பாடல்கள் குருவைத் (ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகர்) துதிக்கும் பாடல்களாக உள்ளன. தொன்னூற்றி எட்டாம் பாடல் நூலின் பலனை உரைக்கின்றது. பக்தி இலக்கியப் பாடல்களின் வளர்ச்சியில் நூலின் பலனுரைத்தல் எனும் மரபு வளர்ந்து வந்தது. இதைப் பின்பற்றி இந்நூலிலும் இம்மரபு கடைபிடிக்கப் பட்டுள்ளது. இந்நூலின் பலனைக் கூறும்பொழுது,

> "சிவவடிவாயெழுந்த முத்துராமலிங்க தேசிகனாலருள் செய்தவ வாக்கியத்தைப்
> பவமகலக் கவிசெய்து கோர்வையான பரஞானவந்தாதி தன்னை யன்பாய்
> நவமதனிற் படிப்போர்கள் கேட்போர்தாமு நலமாக வதினர்த் தம் பார்ப்போர் தாமு
> மவமானபவநீங்கிச் சித்தசாந்த மானந்தம் பெற்றுமே லரூபமாவார். (6)

என்று கூறுகின்றார். நூலின் கடைசி இரண்டு பாடல்களும் 'வாழியுரைத்தல்' எனும் தலைப்பில் அமைந்துள்ளன. "முத்து ராமலிங்க ஞானதேசிகரின் திருவடிகளையும், அவரால் உபதேசிக்கப்பட்ட ஞானஅந்தாதி எனும் இந்த நூலையும்

படிப்பவர்கள், கேட்பவர்கள், இதன் பொருளைப் பார்ப்ப வர்கள் கோவிலூர் அடியார் யாவரும் சிறப்பாக எப்பொழுதும் வாழி, வாழி என வாழ்த்துகின்றார்.

## மரபுச் செய்திகள்

நாகலிங்கய்யா, மரபு வழிச் செய்திகளான புராண இதிகாச வரலாறுகளை உவமையாக நூலின் பல இடங்களில் எடுத்தாண்டிருக்கின்றார். இதன் மூலம் இவருக்குப் புராண, இதிகாசக் கதைகளில் ஈடுபாடு உண்டு என்பது தெரிகின்றது. தன் குருநாதரைப் போற்றும் பாடல் ஒன்றில் புராணக் கதைமாந்தர்களை உவமையாகக் கூறுகின்றார். இதனை,

"மணியான பொறுமையினிற்றருமர் போலும்
மலர்வான கொடையதனிற்றதீசி போலுந்
துணிவான வாக்கரிச்சந் திரனே போலும்
சுகமான லீலைதனிற் கிருஷ்ணன் போலுந்
திணியான ஞானமதிற் சனகன் போலுந்
சிவபணியிற் றிருநாவுக்கரசே போலு
மணியான போதனையில் வசிட்டர் போலு
மடுத்த முத்துராமர் திருவருளே போற்றி" (7)

"சிவரூபமான சுப்பிரமணியன்றனுந்" (8)
"அருள் வீரபத்திரனங் கிரியுங் கீழாம்" (9)
"மகத்தான வசிட்டர் மிகவறைதலாலே" (10)

என்ற பாடல்கள் மூலம் அறிய முடிகின்றது.

## தாழ்த்திக் கொள்ளுதல்

சமய இலக்கியங்களில், இறைவனைக் குறித்துப் பாடும் பொழுது தன்னை மிகத் தாழ்ந்தவனாக எண்ணிக் கொண்டு பாடுவது உண்டு. சிவரூபமாக இருக்கின்ற தன் குருவினைப் போற்றிப் பாடும்பொழுது நாகலிங்கய்யா தன்னை நாயைவிடத் தாழ்ந்தவன் என்று கூறுகின்றார். இதை,

"தெருளிலா நாயினுமே கடையனை சிறியனையுமாட் கொண்ட சிவமே போற்றி" (11)

"செம்பது மத்தாளுடையவையா நாயேன் சிவமாகவருள் புரிவதுனக்கே பாரம்" (12)

இப்பாடல்கள் மூலம் அறிந்து கொள்ளலாம்.

யாப்பு

நாகலிங்கய்யா பலவகையான ஆசிரிய விருத்தங்களைப் பாடியுள்ளார். அறுசீர் ஆசிரிய விருத்தம், எண்சீர் ஆசிரிய விருத்தம், பன்னிரு சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் மற்றும் சந்த விருத்தம் என்பவற்றைப் பாடியுள்ளார். ஞானஅந்தாதி யில் உள்ள பாடல்களில்,

| | | |
|---|---|---|
| அறுசீர் விருத்தம் | - | 3 பாடல்கள் |
| எண்சீர் விருத்தம் | - | 97 பாடல்கள் |
| மொத்தம் | - | 100 பாடல்கள் |

பாயிரமாகவுள்ள மூன்று பாடல்கள் அறுசீர் ஆசிரிய விருத்தத்திலும், மற்ற பாடல்கள் அனைத்தும் எண்சீர் ஆசிரிய விருத்தத்திலும் பாடப்பட்டுள்ளன.

ஏது சொரூபங்காரியம்

தனக்குள் இருக்கும் பிரம்மத்தை, அறிவதற்கு ஞானம் பெற வேண்டும். ஞானத்தை அடையும் வழியின் முதற்படி, குருவைச் சென்றடைதல். பின் குரு அருளும் வாக்குகளைக் கேட்டுத் தெளிந்து மனனம் செய்தல் ஆகும். சொரூபநிலையில் இருக்கும் பிரம்மத்தை அடையக் காரணமாக உள்ளவற்றை விளக்கி நிற்கின்றது ஏது சொரூபங்காரியம்.

இந்நூல் ஐம்பது பாடல்களைக் கொண்டது எனத் தமிழ்நூல் விவர அட்டவணை கூறுகின்றது. (13) மிகச் சேத மடைந்த நிலையில், முப்பத்தைந்து பாடல்கள் மட்டும் கிடைக்கின்றன.

நூலமைப்பு

முதல்பாடல் செல்வவிநாயகரைத் துதிக்கும் பாடலாக அமைந்துள்ளது. அடுத்தது குருவினுக்கு வணக்கம் கூறுமுக மாகப் பாடப்பட்டுள்ளது. அதன்பின் உள்ள பாடல்கள் முழுவதும் பாடுபொருளை விளக்குகின்றன.

யாப்பு

இந்நூல் முழுவதும் அறுசீர்விருத்தத்தில் பாடப் பட்டுள்ளது.

**ஆத்ம நாமம்**

**ஆன்மா – விளக்கம்**

பிரபஞ்சம் முழுவதும் எல்லை இல்லாததாக எங்கும் நிறைந்ததாய் நிற்பது எதுவோ அதுவே ஆன்மாவாக இருக்கின்றது. அத்வைதத் தத்துவத்தில் ஆன்மா குறித்த சிந்தனை சிறப்புடையதாகும். வேதங்களும், உபநிடதங்களும் ஆன்மா குறித்த தத்துவங்களைக் கூறுகின்றன.

ஆன்மாவின் வடிவமாகப் பிரம்மம் அமைந்திருக்கின்றது. ஆன்மா குறித்து கடோபநிடதம் எனும் உபநிடத நூல் கூறும்பொழுது "ஆன்மாவுக்குப் பிறப்பும் இல்லை. இறப்பும் இல்லை. இது அழிக்க முடியாதது என்றும் உள்ளது. உலகப் பொருள்கள் உயிர்கள் அனைத்திலும் உள்ளொளியாக நிற்பது இந்த ஆன்மாவே ஆகும். இது அணுவுக்கும் அணுவானது. அண்டத்திற்கும் அண்டமானது" (14) என்று கூறுகின்றது.

ஆன்மாவின் (ஜீவனின்)உருவமாகச் சிவன் இருக்கின்றார் என்பதைத் திருமூலர்.

சீவனெனச் சிவனென்ன வேறில்லை
சீவனார் சிவனாரை அறிகிலர்
சீவனார் சிவனாரை அறிந்த பின்
சீவனார் சிவனாயிட் டிருப்பரே" (15)

என்று விளக்குகின்றார். நாகலிங்கய்யா சிறப்பு மிக்கத் தத்துவமான ஆன்மதத்துவத்தை முழுமையாகத் தமிழில் விளக்க வேண்டுமென இந்நூலைப் படைத்திருக்கின்றார். ஆன்மாவின் (ஆத்மாவின் பெயர்களை) நாமங்களைக் கூறி விளக்குவதால் ஆத்மநாமம் எனப் பெயர் வைக்கப்பட்டுள்ளது.

**நூல் உருவான சூழல்**

அருணாச்சல சுவாமிகள் (சின்னத் துறவாண்டவர்) ஆத்ம நாமம் என்ற பெயரில் நூல் ஒன்று எழுதி உள்ளார். அதைச் செய்யுள் நடையில் எளிதில் புரியும் படியாக ஆத்மநாமம் எனும் பெயரில் நாகலிங்கய்யா இந்நூலைப் படைத்தார்.

"ஞான வடிவாம் சிவரூபமான அருணாச்சல சுவாமிகள் செய்யான்ம நாமவுரையைத்
தெளிவுபெற நாயினேன் றமிழ்க்கனியதாகவே செய்வதிற் குற்றமுளதேற்" (16)

என்ற பாடல் இதைச் சுட்டிக் காட்டுகின்றது.

## நூலமைப்பு

இந்நூல் ஐம்பத்து ஒன்பது செய்யுள்களைக் கொண்டுள்ளது. செல்வவிநாயகரைத் துதி செய்யும் பாடலாக முதல் செய்யுள் அமைந்துள்ளது. அதன்பின் சுந்தரேசர், மீனாம்பிகை, கற்பக விநாயகர், சுப்பிரமணியர், நடராசர், தெட்சிணாமூர்த்தி, பைரவர், ஆகியோர்களின் துதியும், அதன்பின் குருவணக்க மாக ஒரு பாடலும், அவையடக்கப் பாடல் ஒன்றும் பாயிர மாகப் பாடப்பட்டுள்ளது. பதினொன்றாம் பாடலிலிருந்து பாடுபொருள் குறித்து விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலுக்கும் ஒரு தலைப்புக் கொடுக்கப்பட்டுள்ளது.

## யாப்பு

| | | |
|---|---|---|
| அறுசீர் விருத்தம் | - | 31 பாடல்கள் |
| எண்சீர் விருத்தம் | - | 15 பாடல்கள் |
| பன்னிருசீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | - | 2 பாடல்கள் |
| சந்த விருத்தம் | - | 11 பாடல்கள் |
| மொத்தம் | - | 59 பாடல்கள் |

## பஞ்சகோசம்

ஆன்மாவை மூடியிருக்கின்ற ஐந்துகோசங்களை (உறைகளை) நீக்கி, உள்ளிருக்கின்ற ஆன்மாவாகிய பிரமத்தை அடைய வேண்டும். பிரமமாகிய பிரபஞ்சதில் மோட்சம் என்பது தன்னையே தான் அறிந்து கொள்வது ஆகும். இதை விளக்கும் பொருட்டு பஞ்சகோசமாகிய அன்னமயகோசம், பிராணமய கோசம், விஞ்ஞானமய கோசம், மனோமயகோசம், ~~பிராணமய கோசம்~~ என்பதை இந்நூலில் விளக்குகின்றார்.
ஆனந்தமயகோசம்

## நூலமைப்பு

கர்னாபுரியில் எழுந்த விக்கினேசுரனை வணங்கும் செய்யுளாக முதல் பாடல் அமைந்துள்ளது. அதன்பின் குருவணக்கம் பாடப்பட்டுள்ளது. மூன்றாம் பாடத்திலிருந்து பஞ்சகோசம் குறித்த விளக்கம் கூறப்பட்டுள்ளன. இந்நூல் ஐம்பது செய்யுள்களைக் கொண்டு காணப்படுகின்றன.

## யாப்பு

அறுசீர் விருத்தம், எண்சீர் விருத்தம், மிகுதியாகப்

*பாடப்பட்டுள்ளன. சந்த விருத்தம் இரண்டு பாடல்களில் பாடப்பட்டுள்ளன.*

| | | |
|---|---|---|
| அறுசீர் விருத்தம் | - | 33 பாடல்கள் |
| எண்சீர் விருத்தம் | - | 15 பாடல்கள் |
| சந்த விருத்தம் | - | 2 பாடல்கள் |
| மொத்தம் | - | 50 பாடல்கள் |

**நூலின் புற அமைப்பு**

*ஆத்மநாமம், ஏதுசொரூபங்காரியம், ஞானவந்தாதி, பஞ்சகோசம் ஆகிய நான்கும் ஒரே நூலாக அச்சிடப் பட்டுள்ளன. நூலின் அளவு 15x11 செமீ ஆகும். இவ்வமைப்பு நூலை எப்பொழுதும் கையில் எடுத்துக் கொண்டு செல்வதற்கு வசதியாக அமைகின்றது. அத்வைதத்தை மக்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்றால் இம்மாதிரியான நிறைய நூல்கள் வெளிவர வேண்டும். கோவிலூர் ஆண்டவர் சுவாமிகளாலும், நாகலிங்கய்யாவினாலும் எழுதி வெளியிடப் பட்ட நூல்கள் கையடக்க நூல்களாகவே அமைந்திருக்கின்றன.*

**அடிக்குறிப்புக்கள்**

1. தொல்காப்பியர், 'தொல்காப்பியம்', செய்யுளியல் - 239.
2. அமிர்தசாகரர், 'யாப்பெருங்கலக்காரிகை', பா - 17.
3. மு. இராமசாமி தேசிகர் நூற்றந்தாதி (1990), திருவரங்கம் பதிப்பகம் இராசிபுரம் ப - 14.
4. நா. கதிரைவேல்பிள்ளை, தமிழ்ச் சொல்லகராதி, ப - 297 (2)
5. தமிழகராதி (தொகுதி - 1) சென்னைப் பல்கலைக்கழகம், ப - 10.
6. நாகலிங்கய்யா, 'ஞான அந்தாதி', பா - 98.
7. மேலது, பா - 91
8. மேலது, பா - 94
9. மேலது, பா - 24
10. மேலது, பா - 92
11. மேலது, பா - 96
12. வெ. கன்னையன். 'தமிழ்நூல் விவர அட்டவணை'.
13. மா. சுப்பிரமணியன். 'ஞானச்சுடர்', ப - 141
14. திருமூலர். 'திருமந்திரம்', பா - 2017
15. நாகலிங்கய்யா. 'ஆத்மநாமம்', பா - 10.

●●●

# அத்வைத விளக்கம்

நா கலிங்கய்யா, சீவன்முக்திப்பிரகரணம், வாசுதேவ மனனம், ஞான அந்தாதி, பஞ்சகோசம், ஏது சொரூபங் காரியம், ஆத்மநாமம் என்ற ஆறுநூல்களில் அத்வைதத் தத்துவங்களைப் பாடுபொருளாகப் பாடியுள்ளார். இவற்றில் சீவன் முக்திப்பிரகரணம், வாசுதேவமனனம் என்ற இரண்டும் வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப் பெற்றவையாகும். தமிழ் நூல்களில் காணலாகும் அத்வைதப் பாடுபொருள்களை இப்பகுதி ஆராய்கிறது.

## வேதாந்தம்

'வேதாந்தம்' எனும் சொல்லிற்குச் 'சமயச் சொல்ல கராதி' எனும் நூல் 'உபநிடதம் வியாசராற் செய்யப்பட்டதும் உபநிடதங்களின் பொருளைக் கொண்டதுமான வேதாந்த சூத்திரத்திற் கூறும் உத்தரமீமாஞ்சை மதம்" (1) என்று கூறுகின்றது.

"வைதிகம் வேதமுடிவு, அது உபநிஷத்து எனப்படும் உத்தரமீமாஞ்சை அது அத்வைத மெனப்படும்" (2) என்று மதுரைத் தமிழ்ப் பேரகராதி பொருள் கூறும். இதன் மூலம் வேதாந்தம் எனுமளவில் அது அத்வைதமாக இருக்கின்றது என்ற கருத்துத் தெளிவாகின்றது.

வேதத்தின் இறுதிப் பகுதியாக உள்ள உபநிடதங்களை நூல்களாகக் கொண்டு அமைக்கப்பட்டிருக்கின்ற மெய் பொருளியற் கொள்கைகள் அனைத்தும் பொதுவாக 'வேதாந்தம்' என்று அழைக்கப்படுகின்றன.

**அத்வைதம்**

'அத்வைதம்' என்ற சொல்லிற்கு இரண்டன்மை ஏகாத்ம வாதம்" (3) என்கிறது சமயச்சொல்லகராதி "இரண்டல்லாதது ஒன்றானது பேதப் பொருளிரண்டு தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடம். அஃதாவது பொருளிரண்டாயிருந்தும் ஆங்கே வேற்றுமையறக் கலந்து ஒன்றாய் நிற்கும் தன்மை" (4) என்று மதுரைப் பேரகராதி விளக்கம் தரும்.

"அத்வைதம் என்பது இரண்டற்றது (Monism) எனப்படும். உயிரும் உலகமும் பரம்பொருளினின்றும் வேறுபட்டவை அல்ல; உள்ளது ஒரே பொருள் அது அகண்ட சத்து, சித்து, ஆனந்தம் எனப்படும். அது தன்னையே உயிராகவும் உலகமாக வும் காட்டும் வல்லன்மையுடையது. தனது மாயாசக்தியால் இவ்வாறு செய்யும் உயிர்களிடத்துள்ள அஞ்ஞானத்தால் உலகமென்றும் உயிர் என்றும் அவைகளுக்கு வேற்றுமை தோன்றுகின்றது". (5) பிரம்ம ஞானம் எய்திய பொழுது இவையிரண்டும் சிப்பியில் வெள்ளி தோன்றுவது போன்ற பொய்த்தோற்றமே என்பது விளங்கிப் பரம்பொருள் தனது மாயாசக்தியால் இவ்வாறு தோன்றுகின்ற தென்பதை உயிர்கள் உணர்ந்து தாம் கடவுளை அன்றி வேறொரு பொருளன்று எனத் தெளிவதே முக்தி. ஆறு கடலில் கலந்து கடலாவது போன்று உயிர் பிரம்மத்தில் கலந்து பிரமமாவதே முக்தி நிலையாம்.

இதன் மூலம் கடவுள் என்ற ஒரே பொருள் இருக்கின்றது என்றும், ஏனைய இரண்டும் (உயிர், உலகு) இதன் நிழல் போன்ற பொய்த்தோற்றம் என்றும் (அத்வைத) மதம் கூறுகின்றது.

அத்வைத முன்னோடிகள், தம் சமயக் கருத்தினை வடமொழி கொண்டே வெளிப்படுத்த வேண்டும் என்ற வேட்கையோடு இருந்தனர் என்பதைப் பலநூல்கள் மூலம் அறியலாம். "அத்வைதத்தை வடமொழி உபநிடதச் சொற்கள் கொண்டு கற்றுணர வேண்டுமே அன்றி, நாட்டு மொழி கொண்டு உரைக்கக் கூடாது" (6) எனச் சித்தாந்த லேச சங்கிரகம் நூல் கூறுகின்றது இவ்வாறாக, வடமொழியில் அத்வைத நூல்கள் இருந்தமையான் வடமொழி அறியாத நாட்டு மக்களிடமும் அத்வைத சமயம் பரவவில்லை எனலாம். தமிழகத்தில் தமிழ் மக்களிடையே அத்வைதக் கொள்கையும் சமயமும் பரவிடத் தமிழ் நூல்கள் தேவை

என்பது ஒரு சிலரால் உணரப்பட்டது” (7) இதன்படி அத்வைதக் கருத்துக்களைத் தமிழில் எழுதியவர்கள் தத்துவராயரும், சொரூபானந்தரும் ஆவார்கள்.

கோவிலூர் மடத்தில் அத்வைதக் கருத்துக்களைத் தமிழில் மொழிபெயர்க்கும் நோக்கில் புதிய நூல்களை எழுதும் பணியைத் தொடங்கி ‘ஆண்டவர் சுவாமிகள்’ பல அத்வைத நூல்கள் எழுதிச் சிறப்பித்தார். இதை அடியொற்றி நாகலிங்கய் யாவும் தமிழில் நான்கு அத்வைத நூல்களை இயற்றியுள்ளார்.

### ஞான அந்தாதியில் காணலாகும் அத்வைதத் தத்துவங்கள்

‘கோவிலூர் ஆண்டவர்’ என்றழைக்கப்படும் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகரவர் வடமொழியிலும் தமிழ்மொழி யிலும் புலமைமிக்கவர். இவர் பல நூல்கள் எழுதி உள்ளார். ‘சுவாநுபவத் திருவாக்கு’ என்ற நூலில் எண்பத்தியொரு திருவாக்குகளைக் குறிப்பிட்டுள்ளார். அவற்றைத் தலைப்பாகக் கொண்டு நாகலிங்கய்யா இந்நூல் எழுதினார்.

### ஞானம்

தன்னை எதார்த்தமாக அறிகிறதே ஞானம். நானே ‘பிரமம்’ என்றறியும் நிலையும் ஞானமாகும். “அத்விதியனாகிய ஆத்மாவை அத்விதியனாகவும் அபரிச் சின்னனாகிய ஆத்மாவை அபரிச் சின்னனாகவும், அசங்கனாகவும் அகர்த்தா அபோக் தாவாகிய ஆத்மாவை அகர்த்தா-அபோக்தாவாகவும், தன்னை யுள்ளபடித் தோற்றுவிக்கிறதே ‘ஞானம்’ ஆகும் (8) என்பர் அப்பாசாமி பிள்ளையார்.

“ஈசுவரனை வெளியே தேடுதல் அஞ்ஞானம் தமக்குள் ளேயே இறைவன் இருப்பதை உணர்தலே ஞானம் இங்கு, அதாவது தன்னுள் ஈசுவரனை உணர்ந்தோனே அங்கு அவருடைய பாதகமலங்களிற் சேர்ந்து வாழ்வான்” என்பது குருதேவர் வாக்கியமாகும் (9) ஞானத்தைக் கூறும்பொழுது சிறந்த எடுத்துக்காட்டு மூலம் விளக்குகிறார். “காலில் செருப்புப் போட்டுக் கொள்வாயானால் நீமுள்ளின் மேலும் சுலபமாய்ப் போகலாம். ஞானமாகிய செருப்பைப் போட்டுக் கொண்டால் உலகமென்னும் முள்நிறைந்த வனமெங்கும் பயமின்றித் திரியலாம்” என்பார்.

இறைவன் பஞ்சபூதமயமாக, சருவ இடங்களிலும் வியாபித்து இருக்கின்றான் என்பது அத்வைதக் கொள்கை யாகும். நாகலிங்கய்யா தமது நூலில் இக்கொள்கையினை விளக்குகின்றார். இதனை,

"தானாகிச் செகத்தெல்லாந் தனக்கு வேறாய்ச் சகத்தில்
லாதாலுமத்துவிதந்தா னென்றார்" (10)

என்ற பாடல் மூலம் அறியலாம்.

**பிரமம்**

உலகப் பொருள்களை எல்லாம் உள்நின்று இயக்கும் சக்தி ஒன்று உள்ளது என்பதை உணர்வதே 'மெய்யுணர்வு' என்கின்றனர் ஞானிகள். இயற்கைக் காட்சிகளைக் கண்டு, அவற்றினுடைய எல்லையற்ற அதிசயத்தில் ஒன்றிப்போய் தன்னை மறந்து இயற்கையைத் துதித்தான் மனிதன். அந்த ஒப்பற்ற உணர்வே மெய்யுணர்வாகும். இதை உணர்ந்து.

"உணர்வினிலே நின்ற ஒன்றை உணர்ந்தேனே" (11)

என்கின்றார் நம்மாழ்வார்.

"அண்ட சாராசரங்களுக்கும் ஆதாரமான பிரமம்
அகவுணர்வாக உள்ளது" (12)

எனச் சொல்லுகின்றது ஐத்ரேய உபநிடதம் இறைவன் உலகப் பொருள்கள் அனைத்திலும் இருப்பதை உணர்வால் உணர்ந் தனர் அத்வைதிகள். மகாகவி பாரதி மிக அழகாகத் தம் பாடலில்,

"ஆகாசம் தீகால் நீர்மண்
அத்தனை பூதமும் ஒத்து நிறைந்தாய்" (13)

என்று கூறுகின்றார்.

எல்லாவற்றிற்கும் காரணமாக இருக்கக் கூடிய பரம்பொருளை அத்வைத நூல்கள் 'பிரமம்' என்று குறிக்கின்றன. பிரமமாகிய 'அது' சீவனாகவும், சீவனின் உள்ளே சீவாத்மாவாகவும் இருக்கின்றது என்று நாகலிங்கய்யா கூறுகின்றார். இதனை,

"தானான சத்திய சிற்சொருபந்தன்னைத்
தனுவாதி பாசங்கண் மறைக்கும் போது
நானாரென்றேண்ணுமிடத்தந்தப் பாச
நவையாவைதிலுள்ள சுகதுக்கங்கள்." (14)

என்ற பாடல் மூலம் அறியலாம். பரம்பொருளை அனுபவிக்க வேண்டிய சீவன் யார்? எங்குமாகி, எல்லாமும் ஆகி உள்ளது பிரமம் எனும் போது, அது சீவனாகவும் சீவனின்உள்ளே சீவாத்துமாகவும் இருக்கிறது. சீவாத்மா, பரமாத்மா என்று பல ஆத்மாக்கள் இல்லை. இரண்டும் ஒன்றுதான்.

பிரமம் பற்றி ஆதிசங்கரர் தரும் விளக்கம் ஆழமான தாகும். ஞானமே பிரம்மம் என்கின்றார். "சீவ்ன் என்றும் ஈசன் என்றும், சிறியது என்றும், பெரியது என்றும் இரண்டும் இல்லை. போக்குவரத்து இல்லாத ஒரு பரம்பொருளே உள்ளது. அது புதியதும் இல்லை பழையதும் இல்லை. எங்கும் என்றும் தடைப்படாத குறைவில்லாத சத்தியமே அது. பேரறிவே அதன் உருவம். அதுவே தான் பேரின்பம். பிரம்மமே ஞானம், ஞானமே ஆன்மா, ஆன்மானுபவமே ஞானந்த சித்தியாகும்."(15) "அங்கே யார் யாரைப் பார்ப்பது? யார் யாரை வழிபடுவது? யார் யாரிடம் பேசுவது? யார் பேசுவதை யார் கேட்பது? எங்கே ஒருவர் மற்றொருவரைக் காண்கிறாரோ, எங்கே ஒருவர் மற்றவரைக் காண்கிறாரோ, எங்கே ஒருவர், ஒருவர் மற்றவரிடம் பேசுகிறாரோ, எங்கே ஒருவர் பேசுவதை மற்றவர் கேட்கிறாரோ, அது சிறியது. எங்கே யாரும் யாரையும் காண்பதில்லையோ, யாரும் யாரிடமும் பேசுவதில்லையோ, அதுவே மிக உயர்ந்தது, சிறந்தது. அது பிரமம். பிரம்மாக இருக்கும் நீ என்றும் அதுவாகவே இருக்கிறாய்" என்கின்றார் விவேகானந்தர். பிரபஞ்சமாகிய பொய்மைப் பாவனையாலும் தன்மயப் பாவனையாலும் காட்சி நீங்கும் என்கிறார் நாகலிங்கய்யா, இதை

"என்றுமே தன்சொரூப நிருணயிக்கினி யானன்றிக்
காண்பதொன்று மில்லாதாகி
நன்றானபு மானன்றித் தறியேபோலு நலமான
ரசிதமன்றிக் கிளிஞ்சல் போலும்
பொன்றுவதாங் காண்பான் காண் பவையின்றிப்
பொருளான நித்தபரிபூன்றமென்றே
நின்றதனான் மித்தையினிற் காண்பான் காட்சி
நிகழாதுபாரெவே நிகழ்த்தினாரே" (16)

"நிகழ்கின்ற காண்பானுங் காட்சிதானு நிதானமகாந்
துரியமதேயன்றி வேறாய்ப்" (17)

என்ற பாடல்கள் விளக்குகின்றன. காண்கின்றவனின் காட்சியானது, கண் முதலிய புறப்புலன்களைத் தாக்கித் தன் வயப்படுத்தும் பொழுது, மனம் அஞ்ஞானம் பெறுகின்றது. காணும் காட்சி வேறாய்த் தெரிகிறது. எனவே, மனதைப் புறப்பொருளாகவே ஆக்கிக் காணும் காட்சியைப் புத்தியானது தன் மெய்ஞானத்தால் விளக்கவேண்டும். அப்போது பிரபஞ்சம் பிரம்மமாகக் காட்சிதரும் என்பது நாகலிங்கய்யா தரும் அத்வைத விளக்கமாகும்.

### வகை–தொகை காணல்

"பிரபஞ்சத்தில் ஓர் ஆன்மாதான் உள்ளது. இருப்பது ஒன்றே, அந்த ஒரே இருப்பு. காலம், இடம், காரணகாரியம் என்பவற்றின் வழியே செயல்படும் போது, பல்வேறு பெயர் களால் வழங்கப்படுகிறது; புத்தி, நுண்பொருள், தூலப்பொருள் என்றெல்லாம் மனம் சம்பந்தப்பட்ட மற்றும் பௌதீக உருவங் களாகவும் வழங்கப்படுகிறது. பிரபஞ்சத்திலுள்ள எல்லாமே ஒன்றுதான். அதுதான் பல்வேறு உருவங்களாகத் தோன்று கிறது. அந்த ஒன்றின் ஒரு சிறுபகுதி காலம், இடம், காரண காரியம் என்ற இந்த வலைக்குள் புகுந்தவுடன் பல உருவங் களைப் பெறுகிறது. இந்த வலையை எடுத்துவிட்டால் மிஞ்சுவது ஒன்றுதான். எனவே அத்வைதத் தத்துவப்படி பிரமம் என்று சொல்லப்படும் ஆன்மாவில் இந்தப் பிரபஞ்சம் ஒன்றே ஒன்று தான்" எனக் கூறுவார் சுவாமி விவேகானந்தர்.

பிரபஞ்சத்தின் வகையில் மூழ்கி அதைக் காணவேண்டு மென்று நினைத்தால் அது மயக்கத்தையே தரும். எனவே, தொகையைக் கண்டு அதனுள் ஒளிந்திருக்கும் பிரம்மத்தைப் பார்த்து அமைதியாய் இருக்க வேண்டும். இதை நாகலிங்கய்யா,

"ஆசான பிரபஞ்ச வகையின் முழ்கி யாயிரங் காதனியம் விசாரித்தாலும்
ஆகாசப்புந்தி மயக்குவதேயல்லான் மகத்தான சொரூபசுகம் வருவதில்லை
யாசானையடைந்து பரவிசாரத்தாலே யாரோ சகமாதியறிவாய்ப் பார்த்தன்
மாசிலதாமுத்தியதால் வகையைக் கண்டு மயங்காதே தொகையைக் கண்டு மகிழ் நன்கென்றார்" (18)

என்ற பாடல் மூலம் விளக்குகின்றார்.

பிரபஞ்சத்தின் வகையானது, மாயை நிலையில் மூன்று வேறுபாடுகளைக் கொண்டுள்ளது. அவை 1. தற்சாதிவேறுபாடு 2. வேற்றுச்சாதிவேறுபாடு 3. அகநிலை வேறுபாடு என்பவை யாகும். இதை ஆதிசங்கரர் "ஏகம் ஏவ அத்விதீயம் பிரமம்" என்ற வேதவாக்கியத்தில் கூறுகின்றார். 'அத்விதீயம்' என்ற சொல்லாட்சியை, மூவகை வேறுபாடுகளைக் கடந்த ஒருமையே ஏகம் என்பதை உணர்த்தவே அழகுறப் பயன்படுத்தியுள்ளார். மூன்று வேறுபாடுகளுள் எந்த ஒரு வேறுபாடும் இல்லாதது பிரம்மம் ஆகும்" (19) ஒரே இனத்தைச் சார்ந்த இரண்டு மரங்கள் தற்சாதி வேறுபாடு என்றும், மரமும் கல்லும் வேற்றுச் சாதி வேறுபாடு என்றும், ஒரே மரத்தில் பல கிளைகள், இலைகள், காய்கனிகள் இருப்பது அகநிலை வேறுபாடு என்றும், பிரபஞ்சம் பிரிக்கப்பட்டிருக்கின்றது. இந்த மாயை யிலிருந்து விலகித் தொகையைக் காணுதல் சிறப்பாகும்.

### பிரபஞ்சம் மாயை

"மா - யா என்றால் எது இல்லையோ அது என்பது பொருளாகும். மாயை பிரம்மத்தை மறைக்கிறது. அதனிடத்தில் பிரிதொன்றான உலகத்தையே உள்ளதாகக் காட்டுகின்றது. உலகம் மித்தியை (பொய்மை) என்பதைப் போலவே மாயையும் இறுதிநிலையில் இல்லாததே ஆகும். ஆனால் அது எப்போதுமே இல்லாதது அல்ல" (20) என்று மாயை குறித்து ஆதிசங்கரர் விளக்குகின்றார்.

"மாயை என்பது பொய்த்தோற்றம் அல்ல. மாயை உண்மையானது, அதே வேளையில் உண்மையற்றதும் கூட. மாயையின் பின்னால் மெய்ப்பொருள் இருப்பதால் அது உண்மை. மெய்ப்பொருள் அதற்கு மெய்த்தோற்றத்தை அளிக்கிறது. மாயையில் எது உண்மையாக இருக்கிறதோ அதுதான் மாயையை ஊடுருவி நிற்கும் மெய்ப்பொருள். இந்த மெய்ப்பொருளை நாம் ஒருபோதும் பார்க்க முடியாது. ஆகையால் எதை நாம் பார்க்கிறோமோ அது உண்மையற்றது; அதற்கு உண்மையான தனி இருப்பு என்பது இல்லை. தனது இருப்புக்கு அது மெய்ப் பொருளையே சார்ந்திருக்கிறது.

மெய்ப்பொருளை அறிந்தவன் மாயையில் பொய்த் தோற்றத்தைக் காண்பதில்லை, மெய்ப்பொருளையே காண் கின்றான். மெய்ப்பொருளை அறியாதவன் மாயையில் பொய்த்

தோற்றத்தையே காண்கின்றான், அதையே உண்மை யென்று கருதுகிறான்" என "மாயை" குறித்து சுவாமி விவேகானந்தர் கூறுகின்றார்.

மாயை குறித்து, தத்துவ்ராயர் கணித முறையில் உவமை கூறி விளக்குகின்றார். அது எளிதாக மாயை குறித்து விளக்கும் தன்மையினை உடைய உவமையாகும். "மாயை என்பது ஞானிக்குப் பூஜ்யம் தான். ஆனால் ஞானம் வராதநிலையில் உள்ள சீவன் தன்னை ஒரு தனி எண்ணாக வைத்துக் கொண்டு பக்கத்தில் இந்தப் பூச்சியத்தைச் சேர்த்துக் கொள்ளுகின்றான். ஓர் இலக்கத்துக்குப் பக்கத்தில் வருகிற பூச்யம் அதைப் பத்து, இருபது, நூறு, ஆயிரம் என்று ஆக்குவது போல் இந்த அஞ்ஞானிக்கு மாயையே பலவாக விரிந்த உலகமாகத் தோன்றுகின்றது." (21)

"இவ்வுலகு உண்மை போலத் தோன்றும் பிரமத்தில், உலகு ஊன்றியுள்ளதை அறியும்வரை உலகம் உள்ளதாகத் தோன்றும். அறிவொளி பெருகுகிற பொழுது இவ்வுலகு பிரமத்தின் வெளிப்பாடு அல்லது தோற்றம் என்பதனை உணரலாம். இவ்வுலகு உள்பொருளினின்று வேறாவது இல் பொருளினின்று வேறாவது என்பதாகும்." (22) பொருள்கள், பிரமத்திற்கும் அழிவுக்கும் இடைப்பட்ட ஒரு நிலையினைப் பெற்றிருக்கின்றன. இந்த உலகமானது பொய்யானது, அல்லது பொய்த்தோற்ற இயல்பினை உடையது. எனவே, பிரபஞ்சம் மாயைத் தோற்றத்தினைக் கொண்டுள்ளது. இதைச் சங்கரர் கயிறு, அரவாகத் தோன்றுகின்ற உவமையினைக் காட்டி விளக்குவார், இதனை நாகலிங்கய்யா,

"பாக்கியமாம் பூமியிலோஷதிகளெல்லாம்
பார்மயமும் பொய்யெனவுமாகுமாபோற்
சாக்கியதாஞ்சிதாகாசந் தனக்கு மேலாய்ச் சார்வது
வேறிலாமையினாற் புமானிழற் போல்
ஆக்கியவிச்சகத் தெல்லாமித்தையென்று
அழகுள்ளதன் மயங்களாகுமென்றும்,
பாக்கியமாமிவ் வசனமடியருய்யப்
பகர்ந்தருளினான் கழனிப் பதியிலாசான்" (23)

என்பார், இப்பாடலில் பார்மயமும் பொய்யெனவும், இச்சகத்து எல்லாம் மித்தை எனவும் அத்வைதக் கோட்பாடுகளை விளக்குகின்றார். மேலும்,

"ஆதிசகம் பொய்யேயான தாலே
சொரூபநிலை தனினி னைவுநில்லாதாலே சொல்சகங்கண்
மித்தையெனச் சொன்னான் ஐயன்" (24)

என்ற பாடல் மூலமும் இதை அறியலாம்.

பிரபஞ்சம் பற்றிக் கூறும்பொழுது, "இல்லாத பிரபஞ்சம்" (25) "பிரபஞ்சம் திரிகாலத்துஞ் சுத்தமதாயில்லாதபடியினாலும்" (26) "பின்னமிலாப் பிரமத்திற் தோன்றாநின்ற பிரபஞ்சம் பிரமமதே" (27) "பிரபஞ்சந் தொடர்பாகத்தான் எழுந்து வளர்ந்து அழிகின்ற இயல்பு பார்க்கின்" (28) என அதன் தன்மையினை உணர்த்துகின்றார்.

## ஆன்மா

உடலின் உணர்வுகள் அனைத்திற்கும் மூலகாரணமாக அமைந்திருப்பது ஆன்மா ஆகும். "ஆன்மா என்னும் சொல்லுக்குப் பொருள் வியாபகமென்பதும் சித்தசித்து (29) என்று சிவஞான போதத்தில் மெய்கண்ட தேவர் கூறுகின்றார். இந்த "ஆன்மா அறிவுப் பொருளாகவும் இல்லை. அறிவற்ற பொருளாகவும் இல்லை. அதாவது சித்தும் அன்று, அசித்தும் அன்று, ஆதலால் சித்தசித்து எனப்படுகின்றது. (30)

விழிப்பு, கனவு, தூக்கம், ஆகிய மூன்று நிலைகளிலும் விளங்குவது ஆன்மாவே ஆகும். ஆன்மாவிற்கு உருவமும், அடையாளமும் கிடையாது. எத்தகைய அறிவையும் பெற வைப்பது ஆன்மாவே என்பதால் அது ஞானமயமானதாகும். இவ்வாறு "ஞானமூட்டுவதாகவும், உயிர் ஊட்டுவதாகவும் சீவாதாரமாகவும் உள்ள ஆத்மா பிரம்மமேயாகும் என்பது அத்வைதக் கருத்தாகும்." (31)

பிரபஞ்சம் முழுவதும் பிரம்மத்தின் வடிவாக அமைந்திருக்கின்றது. எனவே ஆன்மாவும் பிரம்மமும் ஒன்றாகும். சீவன் என்றும், ஈசன் என்றும், சிறியது என்றும் பெரியது என்றும் இரண்டுமில்லை. பிரமப் பொருளின் தன்னுண்மை நிலையும் ஆத்மாவின் தன்னுண்மை நிலையும் ஒன்றே. அதன் காரணமாக, ஆதிசங்கரர் "சீவன் பிரமத்தை விட வேறன்று" என்று அத்வைதக் கொள்கை விளக்கத் தொடரிலே அமைத்துக் காட்டியுள்ளார்.

அவித்தையின் (மாயையின்) காரணத்தால் சீவன் தன்னுண்மை நிலையை மறந்து; தான் வேறு பிரமம் வேறு

எனக்கருதுகின்றது. தான் அல்லாததைத் தானெனக் கருதிய மனம், இந்திரியம் முதலியவற்றின் இயல்புகளைத் தன்னுடைய இயல்புகள் எனக்கருதியும் மயங்கும். பிரமும், சீவனும் ஒன்றே என்ற கொள்கை வலிவு பெற்றால், சீவன் பிரமத்தைச் சென்றடையும் நிலையாகும். இது ஆன்மா பற்றிய அத்வைதக் கொள்கையாகும்,

> "முதலாய்த் தோன்றும் சிற்றறிவை விடிற் சிவமே ஆவதாலே
> மாய்த்திடும் சிற்றறிவாஞ் சீவறிவு தானே மற்றெதுக்கு மூலமதாம்
> பாங்காயென்றார்" (32)

என்று கூறுகின்றார். சீவன் பற்றிய அறிவே மற்றவற்றிற்கெலாம் மூலமானதாகும். ஒருவனுக்குச் சிற்றறிவு நீங்கி விட்டால், சீவனே பிரம்மமாக இருக்கின்றான் என்ற சிவஅறிவு வந்து விடும். என்பதை மேற்காணும் பாடல்வழி உணர்த்துகின்றார்.

"எந்தப் பற்றும் இல்லாமல் இந்த உலகில் வாழக் கூடியவனே ஜீவன்முக்தன். அவன் தண்ணீரில் உள்ள தாமரை இலை போன்றவன். நீரிலேயே இருந்தாலும் அது நீரினால் நனைவதில்லை. மனிதருள் மிக உயர்ந்த நிலையில் இருப்பவன் இவன். மனிதருள் ஏன், உயிர்கள் அனைத்துள்ளும் உயர்ந்த வன் இவன். ஏனெனில் பரம் பொருளும் தானும் ஒன்று என்பதை இவன் அனுபூதியில் உணர்ந்து விட்டான்; தானும் இறைவனும் ஒன்று என்ற உண்மையை உயர்ந்து அந்த அனுபவத்தில் நிற்கிறான். இறைவனுக்கு உனக்கும் சிறிதேனும் வேற்றுமை உண்டு என்ற எண்ணம்கூட உன்னை அச்சத்தில் ஆழ்த்திவிடும். நீயே அவன், உனக்கும் அவனுக்கும் வேறுபாடு இல்லை, துளி கூட! வேறுபாடு இல்லை. நீயே அவன், முற்றிலும் அவன் என்ற அனுபவம் ஏற்படுகின்ற அந்தக் கணமே எல்லாப்பயமும் விலகி விடுகிறது" என்று ஜீவன்முக்த னைப் பற்றி விளக்குகிறார் சுவாமி விவேகானந்தர்.

பிரம்மமும், சீவனும் ஒன்றென அறிந்த நிலையில், பிரம்மத்தை அடையும் வகையில் ஆசார்யர் சங்கரர் நான்கு பயிற்சிப்படி நிலைகளை அமைத்துக் கொடுத்துள்ளார். அவை

1. நித்திய அநித்தியப் பொருளறிவு.
2. இவ்வுலகம், பரவுலகம் என்ற இரண்டிலும் உள்ள சுகத்தை விரும்பாதிருத்தல்.
3. சமம், முதலிய ஆறு குணங்கள்.
4. முமுட்சுத்வம்.

என்பனவாகும். உலக சுகத்தில் பற்றற்ற நிலையினைச் சீவன் அடைய வேண்டும். அப்போதுதான் சீவன் பிரம்மத்துடன் ஒன்ற முடியும். இக்கருத்தை ஞானஅந்தாதி நூல் முழுவதும் நாகலிங்கய்யா கூறியுள்ளார். இது ஆசார்யர் ஆதிசங்கரர் கூறிய இரண்டாம் நிலைப்பயிற்சிப் படியாகும்.

## சிற்றின்பத்தை நீக்குதல்

சிற்றின்பங்களை நீக்க வேண்டும் என்பதை நாகலிங்கய்யா பல உவமைகளுடன் கூறுகின்றார், இதனை,

"என்றுமே சோகமதாஞ் சமுசாரத்தி னெண்ணரிய துன்பமெலா
மோகத்தாலே
நன்றிதெனப் பன்றியுமே யமேத்தியத்தில் ரமிப்பது போல் ரமிக்கின்ற
மூடர்க்கென்றுந்
துன்றரிது ஞானமெனவிவேகியானோன் றொடர்பான சமுசாரந்
தொலைத்தற்காகக்
கன்றுவதாஞ் சோகமடைதலினாற்றுன்பங் கனமானமோ கத்தாற் சுகம்
பாரென்றார்" (33)

"கூடாத சரிரத்திற் புந்திவைத்துக் குணமான வருந்தலுடன்
பொருந்தல் வேண்டி
மூடாள் போற்றீனியிலுமி யோனிதன்னின் முயங்குவதுவே
சரியுமுறுவதாலே
நாடாமலிவ்விரண்டுந்" (34)

"பான்மையுடனென்றந்தை தாய் பெண்ணென்று
பாவனையாலப் படியே யாவதாலே" (35)

என்ற பாடல்கள் மூலம் அறிய முடிகின்றது. பெண்தரும் இன்பமே வாழ்க்கையென்று எண்ணாது, பந்த, பாசத்தால், அவர்பால் வாழ்வை அர்ப்பணிக்காது வாழ்வதே வாழ்க்கையாகும் என்ற கருத்தினை உணர்த்துகின்றார்.

## அன்பு அகங்காரம் போன்றவற்றை நீக்கல்

தன்னையே தான் அறிய வேண்டும் என்ற நிலையில், உலகத்தில் பந்தபாசங்களை விட வேண்டும், அன்பையும், அகங்காரத்தையும் அத்வைதிகள் 'இராகம்' என்ற சொல்லால்

*அழைப்பர். இராகத்துவேடத்தை கலைத்தால் வானத்தைப் போல் பொதுமையாகி விடலாம் என்கின்றார் நாகலிங்கய்யா. இக்கருத்துக்களை*

"வருகின்ற ராகத்து வேடநீக்கின் வானம் போற் பேதமிலாத பேதமாக
மருவுவதாலிங்கி தெனுமங்கி தென்னு மாகின்றியயிக்கியமே
மருவலாகு
.....................
யுரிமையுடனின் கங்குமி ராகத்துவேட மொழிவதுவெ யயிக்யமென
வுரைத்தானையன்" (36)

"மோனமதாமனுபவத்திலகங்காராதி முற்றுமிறந்த திட்டானம்
விளங்கலாலே
மானமுறாத் தன்னிடத்தி லகங்காரந்தான் மயக்கமதே
காரணமாய் வருவதென்றார்" (37)

*என்ற பாடல்கள் மூலம் அறிய முடிகின்றது.*

## ஏதும் அறியாதவனாக இருத்தல்

*சரீரம் முதலாக மாயை ஈறாக இருக்கக்கூடிய முப்பத்தைந்து தத்துவங்களையும் தானே கண்டு; காண்கின்ற காட்சிகளை ஒன்றுமே காணாததாகக் காண்கின்ற நிலையே ஞானம் ஆகும். என்கின்றார், இதனை*

"யாங்கெதுங் காண்கின்றதனை யொன்றுங் காணாதாய்க் காணல்
பிரத்தியக்க ஞானமென்றார்" (38)

*என்ற பாடல் சுட்டும். "ஈதனைத்துஞ்சொரூபமே யானெத்தை யிச்சிப்பேன் எதையிகழ்வேன் என்றிருக்கிறதே பற்றின்மையாம் எனல்" என்று தலைப்பிட்ட பாடல் மூலம் விளக்கும்பொழுது,*

"சகங்கள் பரசொரூபமென்றே யிச்சைதுவேஷம்விடல் பற்றின்மை
ஞான
நாட்டமதாலீதனைத்துஞ் சொரூபமென்றே நசையொழிதல் பற்றின்மை
கூடுமென்றார். (39)

*என்கின்றார். இதன்மூலம் ஏதும் அறிந்தும் அறியாதிருத்தல் போல் இருப்பது நல்லது என்ற கருத்தை வலியுறுத்துகின்றார்.*

## பிரபஞ்சத்தில் பெரியவன், சிறியவன் என்றல் சிற்றறிவாகும்

*மாயை முதலாகச் சரீரம் ஈறாக இருக்கக்கூடிய பிரபஞ்சம் காலத்துக்கு உட்பட்டபடியால், அதனால் வரும்*

உயர்வு, தாழ்வு வருத்தங்களுக்கு அளவில்லை. பிரபஞ்சத்தில் விவேகத்தாற் குணத்தைப் பொருளாய்ப் பாராமல் குற்றமே காணவேண்டும் என்றும், ஒன்றிலே தோன்றி அனைத்து உருவமான உணர்வுக்குப் பகையுறவில்லை என்றும், பெரியவன், சிறியவன், பெரிது, சிறிது என்றும் சொல்வது வீணானதாகும். இதை விளக்க.

"நீங்குகின்ற சரீரமுதன் மாயையீறாய் நிகழ்தத்வ
முப்பதைந்துந்தானே கண்டு
பாங்காக நீங்குதலாலதனையெல்லாம் பரமாக
வறிகின்ற தன்னையொன்று" (40)

"இசைக்கின்றகாலங்கட் கத்தமான வின்புருவாம் பரமாத்மா
வொன்றுமாத்ர
மசைவின்றிக் குறைவுநிறைவின்றிநிற்கு மசைகின்ற மாயைமுதற்
சரீரம் ஈறாய்
நசையுடைய நிறைவுகுறை வடைதலாலே நலமான சரீராதி
காலத்துட்பட்
டசைதலினால் வருத்தங்களுயர்வு தாழ்வா மதற்களவையில்லை
யென்றே அருளினானால்" (41)

என்ற பாடல்கள் அமைந்திருக்கின்றன.

## சுக, துக்கம் நீக்க வேண்டும்

சுக, துக்கம் தோன்றுமாயின் விருப்பு, வெறுப்பு தோன்றும். அதனால் ஏற்றதாழ்வு ஏற்படும். ஆதலால் சுவர்க்கம் செல்வதற்குத் தேவையான கன்மவினை நீங்காமலே அனேகசீலர் இறந்து போய் விடுவர். இதனால், பெரியோர்கள் சுகதுக்கத்தைக் கருதாமல் சமநிலையில் நிற்க வேண்டும் என வேண்டுவர் என்கின்றார்.

"வேண்டுதலாஞ் சுகதுக்கந் தோன்றுமாயின் விருப்பு வெறுப்பதனாலே
தாரதன்மியங்
காண்டலதனாளரக சுவர்க்கமுற்றுங் கன்மவினை நீங்காமலனேக
சீலர்
மாண்டதனாற் பெரியோர்கள் சுகதுக்கத்தை மருவாமற் சமநிலையின்
மகிழ்தலாலே
தாண்டவொணாச் சுகதுக்கமுள்ள மட்டுந் தாரதன்மிய நீங்காது
தவிர்வாயென்றார் (42)

"பாய்கின்ற மனமதுதான் விடயந்தன்னிற் பற்றும் போதின்பம் பின்
பலவாந்துன்ப
மொய்விலதால் வெறுப்புவருமிதுபோற் றன்னிலொரு
சணிகமுறுமாகிலொருகாலும் பின்
னேயமதாந் நற்சுகத்து வெறுப்பிலாது நெடுநாளும்
பெரியோர் களிருப்பதாலே
நேயசுகம் பின்வெறுப்பாந்தற்சுகந்தா னேரிலொருகாற்
பிரியநீங்கா வென்றார்" (43)

இப்பாடலில், பிரபஞ்சத்தில் வரும் சுகம் பின்னால் வெறுப்பாகும். சொரூபத்தில் வரும் சுகம் எத்தனை நாளிருந்தாலும் பிரியம் வாங்காது என்று கூறுகின்றார். வருங்காலச் செய்கையை இன்ப, துன்பமறிந்து செய்ய வேண்டும் என்று கூறுகின்றார்.

"நீங்காதோர் காரியத்தை முயற்சி செய்வோனிகழதனாற்
சுகதுக்கமறிந்து கொண்டு
பாங்காகச் செயவேண்டுமானதாலும்" (44)

"மூன்றாவதாஞ் சுகதுக்கமாதியாவுமுறுகின்ற சங்கற்பமயமதாலே" (45)

என்ற பாடல்கள் விளக்குகின்றன. பிறர் குற்றத்தைத் தனதாய் எண்ணிக் கொண்டு தன் குற்றத்தை விசாரிக்க வேண்டுமெனவும் சொல்கின்றார், இதனை,

"கண்டபலவுயிர்களெல்லாந்தன்னை விட்டுக் காணாதாலவர்
குற்றந்தனதாய்க் கண்டு
தொண்டானதன் குற்றம்பார்த்து நீக்கிற் சுகமதனை
யடைந்திடுவனாதலாலே
மண்டலமார்பலர் குற்றந்தானாய்க் கண்டுமருவியதன் குற்றமதை
யொழிவாயென்றாய்" (46)

என்ற இப்பாடல் வழித் தெளியலாம்.

## ஞானநிலையே மோட்சம் :

ஆசார்ய சங்கரர் வகுத்தமைத்த அத்துவித வேதாந்தக் கொள்கையானது ஞானத்தைப் பற்றிக் கூறும்பொழுது "எடுத்த இப்பிறவியிலேயே முக்தியைப் பெறமுடியும் என்பதை வலியுறுத்துகின்றது. மோட்சம் என்பது சீவனால் சென்றடையக்கூடிய ஒன்றன்று. சீவன் தற்சொரூப நிலையில் நிற்றல்

என்பதே ஞானம் ஆகும். தற்சொரூபத்தை அறிய முடியாமல் சீவனை மறைத்து நிற்கும் அஞ்ஞானத்தை அழிவு பெறச் செய்யும் நிலையே ஞானமாகும்" என்று கூறுகின்றது.

பிறவியை ஒழிப்பதற்கும், பிரம்ம நிலையைப் பெறுவ தற்கும் ஞானமே வழிகாட்டுவதாகும். ஞானம் பொய்மை ஞானமாக அமைவதற்குப் புறச்சூழல்கள் காரணமாகி விடுகின்றன. பொய்மை ஞானம் பற்றிய ஆய்வியல் முறையை 'கியாதிவாதம்' என்ற பெயரால் தத்துவத்துறையானது இன்று விளக்க முற்படுகின்றது. கயிற்றைப்பாம்பெனவும், சிப்பியை வெள்ளி எனவும் அறியும் மாயை குறித்து அத்வைதம் மிகுதி யாகக் கூறுகின்றது. கயிறைக் கயிறாகவும், சிப்பியைச் சிப்பி யாகவும் அறிவது ஞானம் என்ற நிலையாகும். ஞானத்தை விளக்க இவ்வுவமையை அத்வைதம் பாடிய பலர் கையாண் டுள்ளனர். தத்துவராயர், நாகலிங்கய்யா போன்றோர் நூல்களில் இவ்வுவமை மிகுதியாகக் காணப்படுகின்றது.

"சொல்லரியதுரிய மதிற்சகலதுன்புந் தொலைந்து பரமானந்தந்
தோன்றலாலு
மெல்லாமுஞ்சின்மயமென் றெண்ணுகின்ற விந்நிலையே
சங்கரர்க்குமிருப்பதாலும்
புல்லரியதுரியநிலை தனிலுமெல்லாம் பொருவிலாச்
சின்மய மென்றெண்ணப் பட்ட
நல்ல நிலையினும் புத்தியழுத்தம் வேண்டும்
நலமிதுவே யெனவையனுரைத்தானன்றே" (47)

என்ற பாடல் மூலம், துரிய நிலையினும் எல்லாம் சின்மயமென்ற நிலையினும் புத்தி அழுத்தம் வேண்டுமென்று கூறுகின்றார். தன்னை எவ்விதமாக அறியவேண்டும் என்கின்ற பொழுது,

"உரையுள்ள நனாக்கனாச்சுழுத்தி தன்னிலொவ்வாத
விந்தியங்கண்மனாதி மேலும்
புரையுள்ள சூனியமாங் கூத்துவந்து போகவுமே
தானிருந்தங் அறிவதாலே" (48)

தான் நித்யமாகும் என்று கூறுகின்றார். தானாகி உலகமெலாம் தனக்கு வேறானதாக இல்லாமல் தானாகவே இருப்பதால் அத்வைத ஞானமாக ஆகிவிடுகின்றது என்றுரைக்கின்றார்,

இதனை,

"நாடரிய வஸ்து ஒன்றே யிருப்பதாலே, தானாகிச் சகத்தெல்லாம்
தனக்கு வேறாய்ச் சகத்திலாதா லுமத்துவிதந்தான்" (49)
"பல்விதமாய்க் காண்கின்ற பொருள்களெல்லாம் பற்றறவே
துடைபட்டுப் போவதாலுமெல்லா முமித்தையதாமென்று
மென்றே இயம்புவதில் சந்தேகமில்லை" (50)

என்ற பாடல் மூலம் அறியலாம்.

ஞானத்தை ஆன்ம ஞானம், விருத்தி ஞானம் என்று வகைப்படுத்துவர். மனமும், புத்தியும் அகக்கருவிகள் ஆகும். இவற்றிற்கு மேலானதாக இருக்கக்கூடியது ஆன்மா. ஆன்மா தன்னளவில் மாறாத ஞானமயமாக என்றும் விளங்கிக் கொண்டிருப்பது ஆன்மஞானம் எனப்பெறும். "அந்தக்கரண விருத்தியானது (உடல் உறுப்பு) ஆத்மாவின் ஞானத்தால் விளக்கமடையும் போது, ஏற்படும் அறிவு விருத்தி ஞான மாகும். காட்சி அறிவு என்றும் கூறுப்பெறும், பழுதையைப் பழுதையாக, பிரபஞ்சத்தைப் பிரமமாகக் காணும் அறிவே விருத்தி ஞானம் ஆகும். இவற்றை,

"சொன்னவொரு பழுதையினின் வந்தசற்பஞ் சுத்தமதாம்
பழுதையெனச் சொல்வதே போற்
பின்னமிலாப் பிரமத்திற்தோன்றாநின்ற
பிரபஞ்சம் பிரமமதேயாகுமென்றிங்" (52)

என்ற பாடல் வழி அறியலாம்.

நாகலிங்கய்யா, ஞானஅந்தாதி என்ற நூலில், தன் குரு அருளிய திருவாக்குகளை உரை செய்யும் முகமாக, அத்வைதத் தத்துவங்களை உள்ளடக்கிச் செய்துள்ளார்.

"கண்டுஅடியேன் வணங்கவந்த முத்துராமக் கனி திருவாக்கு
அருளியிடும் வாக்கியத்து
ளுண்டான வெண்பதொன்றாம் வாக்கியத்தை யுரைசெய்தேனுண்மை
யறிவு திக்க வென்றே" (53)

என்று தாம் நூல் செய்த நிலை குறித்து விளக்குகின்றார்.

**பஞ்சகோசத்தில் காணலாகும் அத்வைதத் தத்துவங்கள் :**
**பஞ்சகோசம்**

பஞ்ச என்றால் ஐந்து. ஐந்து கோசங்களைப் பற்றியது என்பதனால், பஞ்சகோசம் என இந்நூலுக்குப் பெயர்

வைக்கப்பட்டிருக்கின்றது. "கோசம் போலவே ஆத்மாவை அறியவொட்டாமல் மறைக்கின்றபடியால் கோசம் என்று பேர் வந்தது". *(54)*

பஞ்சகோசம் என்பதற்கு அன்னமயகோசம் பிராணமய கோசம், மனோமயக் கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமயகோசம் என ஆன்மாவை மூடிக்கொண்டுள்ள ஐவகைக் கோசங்கள்" (55) என்று சமயச் சொல்லகராதி பொருள் தருகின்றது.

**கோசம் விளக்கம்**

கோசம் என்பதற்கு உறை, கருவூலம், கருப்பை, கவசம், என்ற பொருள்களை மதுரைத்தமிழ்ப் பேரகராதி கூறுகின்றது. கோசம் என்று சொல்லக்கூடிய உறையானது ஆத்மாவைச் சுற்றி மறைத்துக் கொள்ளுகின்றது. ஆத்மாவைப் பிரம்மத்தை நோக்கிச் செல்லவிடாமல் தடுப்பதனால், இதை விலக்க வேண்டும் என்பர் அத்வைதிகள்.

**கோசத்தின் முக்கியத்துவம்**

ஆத்மா, பஞ்சகோசத்துக்கு அன்னியம் என்று சுருதி (வேதம்) சொல்கிறபடி பஞ்சகோசத்தை அறிந்து கொள்ள வேண்டும் இதை அறியாமல் பஞ்சகோசத்திற்கு அன்னிய மாகிய பிரம்மத்தை அறியக்கூடாதாகையினால் பஞ்சகோசத் தத்துவம் மிகவும் முக்கியத்துவத்தைப் பெறுகின்றது. எனவே, அத்வைத தத்துவங்களில் பஞ்சகோசம் பற்றியவை சிறப்பிடம் பெறுகின்றன. ஆத்மாவை அறியவிடாமல் தடுக்கின்ற கோசத் திற்குப் பல உவமைகள் அத்வைதீகளால் கூறப்படுகின்றன. அவற்றில் சில குறிப்பிடத் தக்கவையாகும். அக்கினியினுடைய சத்தையை (உருவத்தை) உபசீவித்துக் கொண்டே தோற்றப் பட்ட புகை அவ்வக்கினியை மூடிக்கொள்வது போலும், பழுதையின் சத்தையை (உருவத்தை) உபசீவித்துக் கொண்டே தோற்றப்பட்ட பாம்பு அந்தப் பழுதையை மூடிக்கொள்வது போலும், ஆத்ம சத்தையை (உருவத்தை) உபசீவித்துக் கொண்டே தோற்றப்பட்ட பஞ்சகோசங்களுக்கும் ஆத்மாவை மூடும்படியான திறமையுண்டு என்பர்.

## பஞ்சகோசத்தின் வகைகள்

### அன்னமய கோசம்

ஸ்தூல தேகத்தில் பொருந்திய சீவனும், ஈசனும் முறையே விசுவனென்றும் விராட்புருடனென்றும் சொல்லப் படுவர். ஸ்தூலதேகமே அன்னமய கோசமாகும். "சட் பாவ விகாரமாகத் தோற்றப்பட்ட தூல தேக" (56) மென கட்டளைப் பிரபந்தம் எனும் நூல் கூறுகின்றது. இதனை

"தூலமே மருவுஞ் சீவன் சொல்லிய விசுவனாகுதந்
தூலமே மருவுமீசன் சொலும்விராட் புருடனாகுந்
தூலமே யன்ன கோசந்" (57)

என்று கைவல்லிய நவநீதம் நூல் உரைக்கின்றது. அன்னமய மாவது தோலும், இரத்தமும், தசையும், நரம்பும், எலும்பும், மூளையும் ஆகிய உடலாகும்.

### பிராணமய கோசம்

பிராணனுங் கன்மேந்திரியமும் கூடி நிற்பது பிராணமய கோசமாகும். "கன்மேந்திரியம் என்பது வாக்கு (வாய்), பாதம் (கால்), பாணி (கை), பாயுரு (அபானம்) உபத்தம் (குறி) என்ற ஐந்தாகும்." (58) இதனை நிஷ்டாநுபூதி நூல் விளக்கமாக, "ப்ராணாதியாகிய சமஷ்டி வாயு ஒன்றுடனே வாக்காதி கர்மேந்திரியம் ஐந்தும் கூடியிருத்தல்" (59) என்று கூறுகின்றது.

### மனோமய கோசம்

"புத்தி நீங்கலாக மனம் ஆதியாகிய அந்தக்கரணம் ஒன்றுடனே, வாக்கு முதலாகிய கர்மேந்திரியம் ஐந்தும் கூடியி ருத்தல் மனோமய கோசமாகும்." (60) கரணம் நான்காவது மனம் (ஒன்றை நினைப்பது) புத்தி (அதனை விவரிப்பது) அகங்காரம் (அதனைக் கொண்டு மேன்மேலும் எழும்புவது) சித்தம் (அதனைச் செய்து முடிப்பது) என்பவை ஆகும்.

### விஞ்ஞானமய கோசம்

புத்தியும், ஞானேந்திரியமும் கூடி நிற்பது விஞ்ஞானமய கோசமாகும்.

### ஆனந்தமய கோசம்

மனோமயமும் விஞ்ஞானமயமும் அஞ்ஞானத்தில் அழுந்திய காரணதேகமாய் இருத்தல் ஆனந்தமயகோசமாகும்.

### பஞ்சகோசத்தை அறிதல்

அஞ்ஞானம் பெற்றிருக்கக்கூடிய ஆத்மாவாவது பஞ்ச கோசத்தின் முழுக்கட்டுப்பாட்டில் செயல்பட்டுக் கொண்டிருக்கும். பஞ்சகோசத்தின் தன்மையினை அறிந்து ஆத்மா அதை விட்டுவிட்டு மெய்ஞானத்தைப் பெற வேண்டும். இதை அத்வைதாந்த சுவாமிகள். "நானென்கிற ஆத்மா எதுவரை பஞ்சகோசம் என்ற அத்தியாயத்தை விடவில்லையோ அதுவரை ஜென்மப் பிராப்தி (மோட்சம்) இல்லை. முக்தியும் இல்லை. சித்தம் ஆனதினால் எதுவரை அவஸ்தாத்திரயங்களை நானென்றும் சத்தியமென்றும், பாவித்து இருக்கின்றானோ அதுவரை மேலே சொன்ன பஞ்சகோசங்களும் காணப்படும்" (61) என்கின்றார்.

பஞ்சகோசம் என்கின்ற குகையில், பிரம்மத்தைப் புத்திக்குக் காட்சியாக எவன் அறிகின்றானோ, அவனே சகல விதமான துக்கங்களிலிருந்து விடுபட்டவனாகவும், பெற வேண்டியவற்றைப் பெற்றவனாகவும் சீவன் முக்தனாகவும் இருக்கின்றான். நம்மை அறியாமல் நாம் செய்து கொண்டிருக்கக்கூடிய செயல்களைப் பஞ்சகோசமே இயக்குகின்றன. இதையறிந்து அந்தந்தக் கரணங்களை அந்தந்தத் தொழில்களைச் செய்யவிட வேண்டும். இதனை "ஆத்மாவும் பஞ்ச கோசமும் சேர்ந்து தொழில் நடக்கிறதாயிருந்தாலும், விவரிக்கும் பொழுது பஞ்சகோசமே சகலவியாபாரமுஞ் செய்கிறதும் அவைகளுக்குக் கொஞ்சம் குறைவு வந்தால் அந்தந்தத் தொழில் நடவாமல் போவதும் அனுபவமாய் காணப்படுகின்ற படியாலும், எப்பொழுதும் பஞ்சகோசமே சகல வியாபாரத்தையும் செய்கிறதே தவிர சாட்சியாகிய நாம் எப்பொழுதும் ஒன்றும் செய்யவில்லை" (62) என்ற அத்வைதாந்த சுவாமிகளின் உரைகண்டு தெளியலாம்.

### அன்னமய கோசம்

அன்னம் என்பது தூலதேகமாகும். இது உறை போல் ஆன்மாவினை மூடியிருத்தலால் கோசத்தில் ஒன்றாம். இதனை

"அன்னத்தினால், பிறப்பாய் ஸ்தம்பம் போல் தூலமாய் ஷட்கோசத்துவமாய் தோற்றப்படுகிற தூலசரீரமே அன்னமய கோசம்" என்று "வாசுதேவர் மனனம்" விளக்குகின்றது.

அன்னமயகோசத்திற்கும், ஆத்மாவிற்கும் கூட்டுறவு (தொடர்பு) உண்டு. அதாவது சீவன், சாமானிய சாதிவிகாரம், அங்கம், வர்ணம், விஷேசசாதி, ஆசிரமம், நாமம், சமஸ்காரம், வேசம், கிரியை, முதலான அன்னமயகோச தர்மங்கள் ஆத்மாவினிடத்தில் தோற்றுவிக்கப்படுகின்றன. இதனால் தூலசரீரம், என்றைக்கும் இருப்பதுபோல், இன்பமாய் இருக்கின்றதென்று அன்னமயகோசத்தினிடத்து மாயைத் தோற்றம் பெறுகின்றன. எனவே, இவற்றை அறிந்து கொண்டு இத்தகைய தர்மங்கள் ஆத்மாவிடத்திலிருந்து விலகி ஓடச் செய்ய வேண்டும். "நான்சீவன் மனுஷனென்பது சீவத்துவாரா சாமானிய அத்தியாசம். நான் பிறந்தேன், இருக்கின்றேன், வளர்ந்தேன், பருத்தேன், இளைத்தேன், நசித்துப் போகின்றேன் என்பது விகாரத்துவாரா விஷேச அத்தியாசம்" (63) என்பார் அப்பாசாமி பிள்ளையவர்கள். அன்னமயகோசத்தை விளக்கும் முகமாக நாகலிங்கய்யா, விகாரத்துவாரா விஷேச அத்தியாசத்தை கீழ்க்காணும் பாடல்களில் அழகாக விளக்கியுள்ளார்.

"நானுமே பருத்திளைத்தே னானுயர் வென்கையாலு
மானதோ ரன்னகோச மான்வாவாமென்று சொல்லி
னூனமாமரண மூர்ச்சை யுற்றிடும்பொழுது தன்னை
மானமாய்ச் சூழ்ந்திருந்த வஸ்துவை யறியாததாலும்" (64)

"தேகத்தாற் பலமாய்த்தேக மிலாவிடிற் பலங்களற்றும்
பாகமாந் தேகம் விட்டோர் பரமான்மா விலாததாலும்" (65)

"பருத்திளைத்த என் கையினாலுமேலாய் உன்னில்" (66)

நான் பிராமணன், சத்திரியன், வைசியன், சூத்திரன் என்பது வர்ணத்துவாரா அத்தியாசம். நான் புருஷன், நான் ஸ்திரி, நான் அலியென்பது அங்கத்துவாரா அத்தியாசம் ஆகும். நான் தெலுங்கன், தமிழன், கணக்கன் என்பது விசேசாதித் துவாரா அத்தியாசம் ஆகும். நான் பிரம்மசாரி, சந்நியாசி என்பது ஆசிரமத்துவாரா அத்தியாசம். நான் கிருஷ்ணன், ராமன், கறுப்பன், சிகப்பன் என்பது நாமத்துவாரா அத்தி

யாசம். நான் தீட்சதன், சோமயாகி, நான் பவுண்டரீகயாகி என்பது சமஸ்காரத்துவாரா அத்தியாசம். நான் உபாத்தி யாயன், கல்யாண மாப்பிள்ளை, தச்சன், குசவன், கூலிக்காரன் என்பது கிரியாத்துவாரா அத்தியாசம் ஆகும். அன்னமய கோசத்தில் நானென்பது மலம் போலவென்று விவேகத்தால் தள்ளத்தக்கதாகும்.

நாகலிங்கய்யா, அன்னமயகோசத்தை விளக்கும் வகையில் பல பாடல்கள் பாடியுள்ளார். மைந்தனுக்குக் கூறுமுகமாக பாடல்கள் அமைந்துள்ளன. இதனை,

"நாமறிபொருளாய் நம்மை
யிசையவையறியாதாலு மிவ்வன்மையமாங்கோச
மிசையான தானன்றென்று மிகவுமே யறிவாய் மைந்தா." (67)

என்று மைந்தனை விளித்துக் கூறுவதன் மூலம் அறியலாம்.

## பிராணமய கோசம்

"கர்மேந்திரிய பஞ்சகமும், பிராணாதி பஞ்சகமுங் கூடினது பிராணமயகோசம்" (68) ஆகும் என்று வாசுதேவர் மனனம் நூல் கூறுகின்றது.

பிராணமயகோசத்தை விளக்க வரும் அத்வைதிகள் அதை ஒரு நல்ல எடுத்துக்காட்டு மூலம் விளக்குவர். அது இங்கு குறிப்பிடத் தகுந்தவையாகும். "கர்மேந்திரியத்துடன் கூடிய பிராணமயகோசத்தை நானென்பது தத்துப் பிள்ளையை எடுத்துத் துக்கப் படுகிறவள் போலும். இதர அத்தியாசம் என்றறிந்து சர்வவிதத்திலும் நிகிருஷ்டர்களான நீசர்களைப் போலப் பிராணமயகோசத்தைத் தள்ளத்தக்கது" (69) என்பர்.

ஆத்ம சுபாவமாகவும், பிராணமய சுபாவமாகவும் தோற்றுகிறபடியினால் ஆத்மாவிற்கும் பிராணமயகோசத் திற்கும் அன்னியோன்ய அத்தியாசத்தினால் கூட்டுறவு (தொடர்பு) வந்தது ஆகும். எனவே, பிராணமய கோசத்திற்கும் ஆத்மாவுக்கும் கூட்டு உண்டென்பர். அது எவ்விதமென்றால் "அத்தியாச பூர்வகமாய் நான் பசியையுடைத்தானவன், தாக முண்டானவன், சக்தி யுண்டானவன், வீரியமுண்டானவன், பெலமுண்டானவன், கிரியையுடையவன், வாயு உண்டான வன், நான் தாதா, நான் ஊமை, கையில்லாதவன், சப்பாணி, கூனன், காலுண்டானவன், என்கின்ற இது முதலானவை

பிராணமயகோச தர்மங்கள் ஆகும்" என்பார் அப்பாசாமிப் பிள்ளையவர்கள். இதனை நாகலிங்கய்யா,

"இதனயலாகவான்மா வில்லாத்தாலுநானே
மதவலிவலியிலாதான் மலிபசிதாகமுள்ளா
னிதமானவசனன்றன னேகினனென்பதாலுஞ்
சதமானபிராணகோசந் தானான்மாவாகுமென்னில்" (71)

என்ற இப்பாடலில் பசிதாகம் உள்ளான் என்று பிராணமயத் தர்மம் குறித்துக் கூறுகின்றார். மேலும்,

"அசைவுறுவாயு விருந்தாலும் பலனமையாதவை போல" (72)

"ஆகியமனவான் மாநினைத்தாட்ட வசையும் பிராணனையும்
யூகித்தாட்டிய வவ்வான்மாவே றுறுதலினாலுமிழி
வாகியதேக மெனதென்றறிபவன் வரமாயதற்கயல்போ
லேகுறுமெனதாம் பிராணன்பெலமா யிருக்குதுவில்லை பெலம்" (73)

"என்றும் பசியுந் தாகமதுளதிங் கென்வாக்காதிகளு" (74)

"நசையுறு பிராணமய கோசந்தா னாமலவாமென்றே
வசையற வறிந்தெக் காலும் விலக்கிடு" (75)

என்ற பாடல்கள் மூலம் பிராணமயகோசத்தின் தன்மையினை விளக்கி அதைத் தவிர்த்திடும் முறையினைக் கூறுகின்றார்.

## மனோமய கோசம்

மனோமய கோசத்தை நான் என்று சொல்லுவது ஓடுகிற சலப்பிரதிப்பிம்பம் போலவாம். மனோமய கோசத்திற்கும் ஆத்மாவுக்கும் மற்ற கோசங்களைப் போலக் கூட்டு உண்டு. அக்கூட்டு பற்றி வாசுதேவமனனம் என்ற நூல் கூறும் பொருள் சிறப்புடையதாகும். "நான் சங்கற்பவான், விகற்பவான், நான் சோகி, மோகி, ரோகி, நான் போகி, குரோதி, துவேஷி, நான் பிரஷ்டன், சற்சனன், கிராதகன், செவிடன், குருடன் என்கின்ற இது முதலான மனோமயகோசசுபாப தர்மங்கள் மனோமய கோசத்தினிடத்திலும் தோற்றுகின்ற படியினால் மனோமய கோசத்திற்கும் ஆத்மாவிற்கும்.... கூட்டுறவு வந்தது." (76) இதையறிந்து நம்மை நாமே பொருளதாய் அறிந்திடல் வேண்டும் என்கின்றார்.

இதனை,

"என்றன் மனதுமே சங்கற்பிக்கிதிங் கிச்சையாதிசெய் தென்றலாலுமே
மன்றன்மனமயகோசம் பஞ்சதன் மாத்ரைசத்துவ குணத்தில் வந்ததா
லொன்றசத்துடன் சடந்துக்காதியா யுற்றுநடமறி பொருளாய் நமை
நன்றறிந்திடா தாலுமமைய கோசநாமலவென்று தேறுவாய்" (77)

என் பாடல் வழி வெளிப்படுத்துகிறார்.

## விஞ்ஞானமய கோசம்

"பஞ்சகோசங்களுக்குள்ளே விஞ்ஞானமயகோசத்தில் மட்டும் தான் ஆத்மாவானது பிரகாசமாய் விளங்கும்," (78) இது எதுபோலென்றால், சூரியன் சுவரிலும் சேற்றிலும், ஓடுகின்ற கலங்கின நீரிலும், ஆவரணத்துக்குள் இருக்கிற நீரிலும் நன்றாய் விளங்காமல் இருக்கும். தெளிவாயும் அசைவற்றும் பாசியற்றும் இருக்கின்ற நீரில் மட்டும் பிரகாசமாய்ப் பிரதிப் பிம்பம் தெரிவது போலாகும். விஞ்ஞானமய கோசத்திற்கும், ஆத்மாவுக்கும் கூட்டு உண்டு. "நான் கர்த்தர், நிச்சயவான், புத்திவான், யுக்திபுத்தி சாதுரியமுண்டானவன், யோக சாதகன், நான் விரதன், பண்டிதன், லோகாந்தரத்திற்குப் போகிறவன் என்கிற இது முதலான விஞ்ஞானமயகோச சுபாவதர்மங்கள்... விஞ்ஞான மய கோசதர்மமாகவும் தோற்றுகின்றபடியினால் கூட்டுறவு வந்தது." (79) என்று வாசுதேவமனனம் விளக்குகின்றது.

நாகலிங்கய்யா, விஞ்ஞானமயகோசத்தை விளக்கும் பொழுது, "நான் புத்தி வந்தனான் கர்த்தாவென்னு மந்தமுள விஞ்ஞானமயமாங் கோசமான்மாமென்பாயேலதுவுங் கேளாய்" (80) என்கின்றார். மேலும்,

"மறிவாம் விஞ்ஞானமய கோசமும் பஞ்சதன் மாத்திரைச் சத்துவத்தி
லுற்பனமதாயசத் தாதியாய்நம்மாலு முற்றறிவதாயு நம்மை
யொருநாளுமறியாத விஞ்ஞானமயகோச மோதினாமன்று மைந்தா" (81)

என்று கூறுகின்றார். நம்மை, நம்மால் முற்றும் அறிவதாய் உள்ள நிலையினை அடைந்தால், கோசம் நீங்கி விடும் என்ற பொருளை இப்பாடலில் விளக்குகின்றார்.

## ஆனந்தமய கோசம்

பிரதானமாக இருக்கக்கூடிய அஞ்ஞானமே ஆனந்தமய கோசமாக இருக்கின்றது. ஆனந்தமய கோசத்திற்கும் ஆத்மா விற்கும் கூட்டு உண்டு. அதாவது "நான் போக்தன், சந்துருஷ்டன், நான்சுகி, சாந்தன், ராசதன், தாமதன், சடன், அனுந்தன், துக்கன், அசந்துருஷ்டன், மூடன், அஞ்ஞானி, துஷ்டன், முண்டன், மோகிதன், விவேகி, பிராந்தனென்கிற இது முதலான அஞ்ஞான தர்மங்கள் என அஞ்ஞானம் நன்றாய்த் தோற்றப்படுகிறதென்ற ஆனந்தமயகோச சுபாவ மாகவும் தோற்றப் படுகின்றபடியினால் ஆனந்தமயகோசத் துக்கும் ஆத்மாவுக்கும் அன்னியோன்ய அத்தியாசத்தினால் கூட்டுறவு வந்தது" (82) ஆகும். நாகலிங்கய்யா ஆனந்தமய கோசம் குறித்துக் கூறும்பொழுது, அஞ்ஞானத்தின் தன்மை யினை விளக்கி, சுபாவதர்ம வார்த்தைகளைப் பயன்படுத்திப் பாடல்கள் புனைந்துள்ளார். இதனை,

"நானுறு சுகியஞ்ஞானி நானுமே பிரியனென்று
மானவானந்த கோச மான்மாவாமென்று சொல்லி" (83)

"சுழுவிலா வென்னஞ்ஞான மென்சுகமென்கையாலு
மழியுமானந்த கோச மவித்தையில் வருவதாலும்" (84)

என்ற பாடல்கள் மூலம் தெரிந்து கொள்ளலாம். இப்பாடலில் நானொரு சுகியன், அஞ்ஞானி, நானுமே பிரியன், அஞ்ஞானம், என்ற சுபாவதர்ம வார்த்தைகள் நாகலிங்கய்யா வால் கையாளப் பட்டிருக்கின்றன.

நம்மை அறியாதபடியாகச் சூழ்ந்திருக்கக்கூடிய பஞ்ச கோசங்களை அறிந்து எவன் அதை நீக்க முயல்கின்றானோ, அவனே ஞானம் பெறுகின்றான். ஆனால் யாரும் முயல்வ தில்லை இதை நாகலிங்கய்யா கூறும்பொழுது,

"நாமறிவதாயு நிசநம்மையறியாதாயு நிகழுமானந்த கோசம்" (85)

"நசை பஞ்சகோசநீக்கி னானெவன் சொல்வீரையா" (86)

என்று கேட்கின்றார். ஆன்மாவின் சிறப்பைக்கூறி அவ்வான்மா அஞ்ஞானம் பெற்றிருத்தலைச் சொல்லுகின்றார், இதனை

"ஆன்மா சுகமாய்த் தன்னை யுறும் பஞ்சகோசங்கட்கு

மீனமில் சுகங்கொடுக்கு மின்பத்தாலானந்தந்தான்" (87)

என்ற பாடல் சுட்டுகின்றது. பஞ்சகோசங்களை நீக்க வேண்டும் என்று நாகலிங்கய்யா கூறுவதை,

"ஆதலால் கோசமைந்து மசத்தாதியென்று நீக்கிச்

சாதமிலான்மா நாளுஞ் சத்தாதி லெட்சணத்தா

லேதமிலதுவே நானென்றெண்ணி நீயறிவாய்" (88)

என்ற இப்பாடல் வழி அறியலாம். "ஆனந்தமய கோசத்தை நானென்பது கண்ணை மறைக்கின்ற இருட்டுபோலும் சத்தியாத்தி யாசமென்று அறிந்து சொரூபத்தில் (பிரம்மத்தில்) விழிப்பாகிற தீபத்தால் தள்ளத்தக்கது" (89) என்று அத்வைதாந்த சுவாமிகள் கூறுவர்.

## ஆத்ம நாமத்தில் காணலாகும் அத்வைதத் தத்துவங்கள்

அத்வைத தத்துவத்தில் ஆத்மா குறித்த சிந்தனை குறிப்பிடத் தகுந்தது ஆகும். ஆன்மாவே ஆத்மா என்று அழைக்கப்படுகின்றது. இந்நூலில் ஆத்மாவையும் பஞ்ச கோசங்களையும் இணைத்து பாடல்கள் மிகுதியாக எழுதப்பட்டுள்ளன.

## ஆத்மாவும் பஞ்சகோசமும்

"ஒன்றுக்கு மேல் ஒன்றாகப் பலகவசங்களால் மூடப் பட்டாற் போல ஆத்மா மூடப்பட்டிருப்பதாகக் கூறும் ஒரு குறிப்பு தைத்திரிய உபநிடதத்திலே உள்ளது." (90) இந்த உபநிடதக் கருத்தைப் போல, ஆத்மாவைச் சுற்றிக் கோசங்கள் ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கிக் காணப்படுகின்றன. ஆத்மாவும், கோசங்களும் நம்மை வழி நடத்துகின்றன. இதையே, "ஆத்மாவும் பஞ்சகோசமும் சேர்ந்து தொழில் நடக்கிறதாயிருந்தாலும், இப்போது விசாரிக்கும் போது பஞ்சகோசமே சகலவியாபாரமுஞ் செய்கிறதும், அனுபவமாய்க் காணப்படுகிற படியாலும் எப்பொழுதும் பஞ்ச கோசமே சகலவியாபாரத்தையும் செய்கிறதே தவிர சாட்சியாகிய நாம் எப்பொழுதும் ஒன்றும் செய்யவில்லை" (91) என்று அத்வைதாந்த சுவாமிகள் கூறுவர்.

எனவே, ஆத்மாவுடன் சேர்ந்தே உறைந்திருக்கின்ற பஞ்சகோசத்தை ஆத்மா விட்டுவிட வேண்டும். ஆத்மாவும் பஞ்சகோசமும் சேர்ந்திருக்கும் நிலை குறித்து அழகான எடுத்துக்காட்டு மூலம் அத்வைதிகள் விளக்குவர். "யோக்கியன் வீட்டில் அயோக்கியர்கள் திருட்டுச் சொத்துக்களைத் திருடி வைத்திருந்ததைப் பற்றி உலகத்தார் யோக்கியனையுஞ் சேர்த்துத் திருடன் என்று சொல்லி வருங்காலத்தில் யோக்கியன் அவர்களை ஒருவரொருவராய்ப் பிரித்து வெளியில் தள்ளின பின்னும் அவர்கள் வேறேயாயிருந்து பழைய திருட்டுத் தொழிலைச் செய்துவருவதால், இவனுடைய யோக்கியதைப் பற்றி ஜனங்கள் மூன்று காலத்திலும் இவன் யோக்கியனென்று நிச்சயமாய்ச் சொல்லுதற்கு ஆதாரமே தவிர விரோத மில்லாதது" என்பர்.

நாகலிங்கய்யா, பஞ்சகோசம் என்ற நூலில் மேற்படிச் செய்திகளை விரிவாகக் கூறியிருந்தாலும் இந்நூலிலும் பஞ்ச கோசங்களைப் பற்றிக் கூறுகின்றார். இவையோடு ஆன்மா பற்றிய செய்திகள் மிகுதியாகக் கூறப்பட்டிருக்கின்றன. மற்ற பாடல்களில் அத்வைதக் கருத்துக்கள் விளக்கப்பட்டி ருக்கின்றன.

ஆன்மா அழியாத் தன்மை உடையது, மோட்சத்தைப் பெறக் கூடியது. அன்னமயகோசம் முதலாகிய பஞ்சகோசங் களும் தொடராத தன்மையினையுடையது. அதற்கு 'நித்தியம்' என்று பெயர், அப்பாடலானது,

"மன்னும் பிரகாபாவமுதன் மருவு நான்குங் கடமதனுக்
குன்னிலென்றுமிருந்து மவையுயர் மண்ணதனுக் கிலாததுபோ
லன்ன கோசமைந்தினுக்கு மபாவநான்கு மிருத்தலினாற்
சொன்னவ பாவங்களிலொன்றுந் தொடராவான் நித்தியமே" (92)

என்று கூறுகின்றது. "ஒருவன் நான் கொல்லுகிறேன் என்று எண்ணுவதும், நான் கொல்லப் படுகின்றேன் என்று எண்ணுவதும் இரண்டும் அறியாமை. உயிரானது கொல்லுவது மில்லை. கொல்லப் படுவதுமில்லை. நைந்து போன ஆடை களைத் தள்ளிவிட்டுப் புதுஉடைகளை அணிவது போல் உடலைக் களைந்து விடுகிறது உயிர். களைந்துவிட்டுப் புதுஉடலைப் பூணுகிறது" (93) என்பது ஆன்மாவைப் பற்றிக் கண்ணன் கீதையில் அர்ச்சுனனுக்கு உபதேசித்த தத்துவம் ஆகும். ஆன்மா குறித்து நாகலிங்கய்யா கூறும்பொழுது,

"பொருமெலாந் தேசத்தேயும் புகலுமெக் காலத்தேயு
நிறைவஸ்துவெலாமு மான்மா நிறைவதாற் பூரணமாமே" (94)

என்று இப்பாடலில் ஆன்மாவின் பூரணத்தன்மை குறித்துக் கூறுகின்றார்.

தினம், திங்கள், வருடம், யுகம், கற்பம் தோறும் பஞ்சகோசம் வருவதன் முன்னும் பின்னும் சமமாய் உண்மையாய் காண்கின்ற நிலையில் ஆன்மாவிற்கு அழிவில்லை. "ஆன்மா பிரபஞ்சத்திற்கு ஆதாரமாகத் தோன்றும் போது இறைவன் எனப்படுகிறது. இதே ஆன்மா, சிறு பிரபஞ்சமான இந்த உடலிற்கு ஆதாரமாகத் தோன்றும் போது ஜீவன் ஆகிறது. எனவே மனித ஆன்மா என்பது இந்த ஜீவனே.

புருஷன் ஒன்றே, அது வேதாந்தம் கூறும் பிரம்மம். ஆராயும் போது ஈசுவரன், ஜீவன் இரண்டுமே பிரம்மத்துள் ஒன்றாகி விடுகின்றன. இடையீடற்ற நீயேதான் பிரபஞ்சம்; எங்கும் நீயே ஊடுருவி நிற்கிறாய். எல்லா கைகளாலும் நீ உழைக்கிறாய்; எல்லா வாய்களாலும் நீ உண்கிறாய்; எல்லா மூக்குகளாலும் நீ சுவாசிக்கிறாய்; எல்லா மனங்களாலும் நீ சிந்திக்கிறாய். பிரபஞ்சம் முழுதும் நீயே! பிரபஞ்சமே உன் உடல். படைக்கப்பட்டவை, படைக்கப்படாதவை எல்லா பிரபஞ்சமும் நீயே. பிரபஞ்சத்தின் ஆன்மா, உடல், இரண்டும் நீயே. நீயே இறைவன்." என ஆன்மாவின் தத்துவார்த்த விளக்கத்தை அழகாக விளக்குவார் சுவாமி விவேகானந்தர். அத்தகைய அழிவில்லாத ஆன்மாவே சத்தியமாகும். இதை இப்பாடல் விளக்கும்.

"தினந் திங்கள் வருடந்தோறும் செறியுகங் கற்பந்தோறும்
வனமான கோசமைந்தும் வருவதன் முன்னும்பின்னும்
கனமுள சமமாய் மெய்யாய்க் காண்கின்றவொரு படித்தா
யகைமாயிருக்குமான்மா வழிவில் சத்தியமாமன்றோ" (95)

அவிகாரம் என்ற தலைப்பின் கீழ் பஞ்சகோசம் ஒவ்வொன்றையும் பற்றிய விளக்கத்தை நாகலிங்கய்யா தந்துள்ளார். அவை விகாரம் எனும் நிலையிலும் ஆன்மா அவிகாரம் எனும் நிலையிலும் காணப்படுதலை இப்பாடலின் கருத்தாகக் கூறுகின்றார். அப்பாடலானது,

"பிறப்பிறப்பாதியாம் விகாரமுளதனகோசம் பேசிடும் பசிகடாகம்
பெலமுடன் கொடுக்கல் வாங்காதியாம் விகாரமது பிராணமய கோசமாகுந்
துறப்பரிய காமாதி விகாரமுளமனோமயஞ் சுகதுக்கமாதியான
தொடர்விகாரங்களும் விஞ்ஞான கோசமாஞ் தொடர்ஞான வஞ்ஞானமுஞ்
சிறப்பான பிரியமுடன் மோதமாம் பிரமோதந் திகழ்வதானந்த மயமாஞ்
செறிபஞ்ச கோசங்களல்லாததாயுமிவை சேர் விகாரவிகாரமு
மறப்பிலாதறிகின்ற சாட்சியாமான்மாவு மற்றுமொரு பொருள்களின்றி
மன்னலாலவிகார மெனவுமேயுபநிடத மலர்வாக வறைவதாமே." (96)

*என்பதாகும். அன்னத்தால் அதாவது உணவினால் ஆயது என்ற காரணத்தால் அதற்கு அன்னமயகோசம் என்று பெயர். இதற்குள்ளே இதைவிட நுட்பமாக உள்ளது பிராணமய கோசம். இதுவே சீவசக்தி. இதற்குள்ளேயுள்ளது மனோமய கோசம் இதற்குமுள்ளே உள்ளது விஞ்ஞானத்தால் அதாவது அறிவால் ஆயது என்ற காரணத்தால் விஞ்ஞானமய கோசம் எனப்படும். இதற்குமுள்ளே உள்ளது ஆனந்தமயகோசம் எனப்படும். இத்தனை கோசமும் மூடப்பட்டு உள்ளேயிருப்பது ஆத்மாவாகும்.*

## ஏது சொரூபங்காரியத்தில் காணலாகும் அத்வைத தத்துவங்கள்

*ஏது என்றால் காரணம், மூலம், குற்றம் எனவும் சொரூபம் என்றால் குணங்குறியின்றியொன்றாய் யாவுங் கடந்தபதி எனவும் மதுரைத் தமிழ்ப் பெயரகராதி பொருள் கூறுகின்றது. இதன்மூலம், பதியின் மூலத்தை அறிதல் என்று இந்நூலுக்குப் பொருள் கொள்ளலாம்.*

## பாடுபொருள்

*"தூய்மையாக உள்ள நிலையில் ஆத்ம விசாரணை செய்து, பரம்பொருளுடன் இரண்டறக் கலப்பதுதான் மோட்சம். அதை உபநிடதங்கள் கூறும் ஞானவழியில் தான் பெறமுடியும்" (97)என்கின்றார் ஆதிசங்கரர்.*

*ஒருவன் பிரம்மத்தை அறியும் அறிவையும் தன்னுடைய மனத்தையும் ஒன்றுபடுத்தி ஒரு தன்மையுடையனவாகத் தியானிக்க அவன் செய்யும் வழிபாட்டு முறையால்தான் முடியும். இம்மார்க்கம் நர்ன்குவகை சாதனைக்காக (மார்க்கம்) கொண்டதாகும். "நான்கு சாதனைகளுக்குப் பிறகு, வேதாந்த*

விசாரணையில் ஈடுபட வேண்டும். கேட்பது (சிரவணம்) மனதில் பதிய வைப்பது (மனனம்) நிதித்தியாசனம் என்பவை இந்த மார்க்கத்தின் பகுதிகள் இவற்றில் நிதித்தியாசனம் என்பது, சிந்தித்துத் தெளிந்ததை இடையறாமல் தியானிப்பதாகும்." (98) இவ்வாறுள்ள வழிபாட்டுமுறைகளினால் மோட்சம் உறுதியாகும்.

அனுபவத்துடன் கூடி இருக்கின்ற சிரவணத்திலேயே ஞானம் வரும். அது திடமாக இருக்கின்ற நிலையில் மனனம் செய்ய வேண்டும். வேதபாடங்களைக் குருமுகமாகச் சிரவணம் பண்ணி அதை அனுபவத்திற்குக் கொண்டுவரும் பிரயாண மனனத்தைப் பண்ணாதவனுக்கு அஞ்ஞானிகளைப் போல் பந்தம் விடாது. எனவே, சிரவணமும் அதை மனனம் செய்வதும் ஞானத்தை அடைவதற்குண்டான வழிகளாகும். இதனை,

"நிற்றலிற்பலனே தென்றா னிகழ்பிரமானந்தந் தான்
செற்றமின் ஞானவேது சிரவணமனனத் தியானம்
பற்றிய சொரூபஞ்சுபானு பவத்தினாற்றேகமாதி
யற்றமாம் பிரபஞ்சங்கள நித்திய மென்றுந் தானே" (99)

"அவமதறவே செய்யு மழகாஞ் சவண மனனம்
பவமாஞ் சொரூபமகண்ட பரிபூரண சத்சித்தா" (100)

என்ற பாடல்கள் மூலம் தெளியலாம். ஸ்ரீஅத்வைதாந்த சுவாமிகள் ஞானத்தைப் பற்றிச் சொல்லும் பொழுது "சிரவண, மனன, நிதித்தியாசன, சமாதி நாலுஞ்சேர்ந்து ஞானமெனப்படும்" என்பர். "சிரவணம் என்பது வேதாந்த வாக்கியப் பொருளை ஒரு குருவின் மூலமாக அறிந்து கொள்வதாகும். குரு என்ற சொல்லுக்கோ இருளைப் போக்குபவர் என்பதுதான் பொருள். அவரிடம் கேட்பதை ஒரு காதால் கேட்டு மறு காதால் விட்டுவிடக்கூடாது. கேட்பவற்றை இடைவிடாது சிந்தித்து ஆராய்தல் வேண்டும். அதாவது புத்திப் பூர்வமாகக் கேட்டவற்றில் சிறந்தவற்றை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். உறுதிப் படுத்தியதில் உள்ளத்தையும் அறிவையும் ஒன்றுப்படுத்தும் நிலையை அறிந்து கொள்ளும் அனுபவமே ஆத்ம ஞானமாகும்" (101) என்று ஆதிசங்கரர் அழகாக ஆத்மஞானம் குறித்துக் கூறுகின்றார்.

வேதத்தின் பொருளைக் கேட்டு, மனனம் செய்து ஆத்மஞானம் பெற நான்கு சாதனங்களுண்டு என்பதை நாகலிங்கய்யா தம் பாடலில், "நாளுஞ் சவணவேது நான்கு சாதனையுண்டாய்" (102) என்கின்றார். மேலும் அதை விளக்கும் நிலையில் பல பாடல்கள் எழுதியுள்ளார். அவை அனைத்திலும் சிரவணம், மனனம், குறித்தும் அதன் அநுபவத்தால் பெறும் ஆத்மஞானம் குறித்தும் கூறியுள்ளார். அஞ்ஞானம் திரும்பாது நம்மைவிட்டு ஓடும்படியாக இருக்கும் வரைக்கும் சாத்திரக் கேள்விதனை (சவணம்) கேட்டு வரவேண்டும் என்கின்றார். இதனை,

"அவதி மாறுஞ் ஞானந்திரும்பா வரைக்குஞ் சவணஞ் செய்தல்" (103)

"செய்யிற்பலமே தென்றற் றிடவப ரோட்சஞான
முய்யுமனனத் தேது வொப்பாவவதி வரைக்கு
மையில் சவணம் பண்ணி மருவிய வஸ்து விவேகம்
பொய்யில் சொரூபஞ்ஆகம புத்தியே காக்கிரத்தே" (104)

என்ற பாடல்கள் விளக்குகின்றன.

## சாது சங்கம் சிறந்தது

சாதுசங்கம் மனிதனுக்கு ஞானநிலையினைத் தோற்றுவிக்கும் சிறந்தஇடமாக இருக்கமுடியும் என்பது அத்வைதிகள் கூறும் பொதுக் கருத்தாகும். இதை நாகலிங்கய்யா தம் பாடலில்,

"ஆகியவவதிகேளா யறவுமே சுழுத்தி போலத்
தேகமும் விடயமியாவுந் திரமாக மறந்திருந்த
லேகமா மோட்சாபேட்சைக் கேதுதான் சாதுசங்கந்
தாகமாஞ் சொரூபந்தானுந் தலைரோமந் தனினெருப்பே" (105)

என்கின்றார். குருபரம்பரை மூலமாகவே வேதாந்த பாடங்கள் சொல்லிக் கொடுக்கப்பட வேண்டும் என்பது மரபாக இருந்தது. இது இந்து சமயத்தவரால் நீண்ட காலமாக ஏற்றுக்கொள்ளப்பட்டு வந்த முறையாகும். குருவே மூன்று காலத்திற்கும் தாயென மதிக்கப்பட்டார். குருவின் அருளாலே தான் ஞானமென்னும் மோட்சம் தனக்குள் கிட்டும். இதை

*நாகலிங்கய்யா,*

"முற்றுமே ஆசை நீங்கி மோட்சவாசையதே தோன்றல்

குற்றமில் காரியஞ்சற் குருவையே தேடிக் கிட்டல்" (106)

*என்று கூறுகின்றார். இவ்விதமாக, ஏது சொரூபங்காரிய நூலின் பாடுபொருள்கள் அமைந்திருக்கின்றன.*

அடிக்குறிப்புக்கள்

1. சீ. ச. சிவவல்லி. 'சமயச் சொல்லகராதி', ப - 322
2. இ.மா. கோபாலகிருஷ்ணக்கோன் (பதி). 'மதுரைத் தமிழ்ப் பேரகராதி', இரண்டாம் பாகம், பக் - 651 - 652
3. சீ.ச. சிவவல்லி, 'சமயச் சொல்லகராதி', ப - 11
4. இ. மா. கோபாலகிருஷ்ணக்கோன் (பதி). 'மதுரைத் தமிழ்ப் பேரகராதி', இரண்டாம் பாகம், ப - 83
5. ப. இராமன், 'பரிபூரணானந்த போதம்', பக் - 32 - 33
6. கலைக் களஞ்சியம், முதல் தொகுதி, ப - 80
7. ஆ. மகேசுவரி, 'தத்துவராயரின் தத்துவப் பரணிகள்' (ஆய்வேடு) ப - 112
8. அப்பாசாமி பிள்ளை, 'வாசுதேவர் மனனம்', ப - 108
9. குருதேவர், 'குருதேவர் வாக்கியம்', ப - 8
10. நாகலிங்கய்யா, 'ஞான அந்தாதி', பா - 81
11. நம்மாழ்வார், 'திருவாய்மொழி', 8. ப. 8. தி
12. மா. சண்முக சுப்பிரமணியம், 'ஞானச் சுடர்', ப - 6
13. பாரதியார் பாடல்கள், 'சாகாவரம்'
14. நாகலிங்கய்யா, 'ஞான அந்தாதி', பா - 6
15. எஸ். கே. சுவாமி, 'ஆதிசங்கரர் விசயம்'. ப - 46
16. நாகலிங்கய்யா, 'ஞானஅந்தாதி', பா - 10
17. மேலது, பா - 11
18. மேலது, பா - 39
19. நா. பாலுச்சாமி. (மு.ப) 'வாழ்வியற் களஞ்சியம்', தொகுதி ஒன்று பக் 284 - 287
20. எஸ்.கே.சுவாமி, 'ஆதிசங்கரர் விசயம்' ப - 46

21. ஆ. மகேசுவரி, 'தத்துவராயரின் தத்துவப் பரணிகள்', பக் - 117 - 118
22. ஏ. ஆர். வாடியா; டி. எம். தத்தா ஹுமாயூன்கபீர் (பதி), 'கீழைமேலை நாடுகளின் மெய்ப்பொருளியல் வரலாறு', தொகுதி - 1, ப - 482
23. நாகலிங்கய்யா, 'ஞான அந்தாதி', பா -38
24. மேலது, பா - 54
25. மேலது, பா - 63
26. மேலது, பா - 73
27. மேலது, பா - 76
28. மேலது, பா - 44
29. மெய்கண்ட தேவர், 'சிவஞான போதம்', ப - 56, செய்தி: பரிபூரணானந்த போதம் - ப.71
30. ப. இராமன், 'பரிபூரணானந்த போதம்', ப . 71
31. எஸ். கே. சுவாமி, 'ஆதிசங்கரர் விசயம்', ப - 45
32. நாகலிங்கய்யா, 'ஞானஅந்தாதி', பா - 47
33. மேலது, பா - 18.
34. மேலது, பா - 34
35. மேலது, பா - 52
36. மேலது, பா - 14
37. மேலது, பா - 13
38. மேலது, பா - 12
39. மேலது, பா - 33
40. மேலது, பா - 12
41. மேலது, பா - 62
42. மேலது, பா - 9
43. மேலது, பா - 36
44. மேலது, பா - 58
45. மேலது, பா - 61
46. மேலது, பா - 46
47. மேலது, பா - 68
48. மேலது, பா - 69
49. மேலது, பா - 71

50. மேலது, பா - 73
51. நா. பாலுச்சாமி (மு.ப.), 'வாழ்வியற் களஞ்சியம்', தொகுதி ஒன்று
52. நாகலிங்கய்யா, 'ஞான அந்தாதி', - பா - 76
53. மேலது, பா - 82
54. அப்பாசுவாமிப்பிள்ளை, 'வாசுதேவர் மனனம்', ப - 75
55. சீ.ச. சிவவல்லி, 'சமயச் சொல்லகராதி', ப - 228
56. கட்டளைப்பிரபந்தம், 'வேதாந்தத் தத்துவக் கட்டளை', ப - 6
57. கோ. வடிவேலு செட்டியார், 'கைவல்லிய நவநீதவசன வினா - விடை', ப - 39
58. கட்டளைப் பிரபந்தம், 'வேதாந்தத் தத்துவக் கட்டளை', ப - 2
59. ஆறுமுகசுவாமிகள், 'நிஷ்டாநுபூதிமூலம்', ப - 36
60. ஆறுமுகசுவாமிகள், 'நிஷ்டாநுபூதிமூலம்', ப - 36
61. அத்வைதாந்தசுவாமிகள், 'பிரம்மானந்த யுக்தி ரத்னாகரம்', ப - 249
62. மேலது, ப - 208
63. அப்பா சுவாமிப் பிள்ளை, 'வாசுதேவர் மனனம்', ப - 77
64. நாகலிங்கய்யா, 'பஞ்சகோசம்' பா - 4
65. மேலது, பா - 3
66. மேலது, பா - 7
67. மேலது, பா - 9
68. அப்பாசுவாமிப்பிள்ளை, 'வாசுதேவர் மனனம்', ப - 75
69. அத்வைதாந்த சுவாமிகள், 'பிரம்மானந்த யுக்தி ரத்னாகரம்', பக் - 248 - 249
70. அப்பாசுவாமிப் பிள்ளை, 'வாசுதேவர் மனனம்', ப - 78
71. நாகலிங்கய்யா, 'பஞ்சகோசம்', பா - 11
72. மேலது, பா - 13
73. மேலது, பா - 15
74. மேலது, பா - 16
75. மேலது, பா - 17
76. அப்பாசுவாமிப் பிள்ளை, 'வாசுதேவர் மனனம்', பக் - 78 - 79
77. நாகலிங்கய்யா, 'பஞ்சகோசம்', பா - 24
78. அத்வைதாந்த சுவாமிகள், 'பிரம்மானந்த ரத்னாகரம்', ப -21

79. அப்பாசுவாமிப்பிள்ளை, 'வாசுதேவர் மனனம்', ப - 79
80. நாகலிங்கய்யா, 'பஞ்சகோசம்' பா - 26
81. மேலது, பா - 28
82. அப்பாசுவாமிப்பிள்ளை, 'வாசுதேவர் மனனம்' ப - 79
83. நாகலிங்கய்யா, 'பஞ்சகோசம்', பா - 30
84. மேலது, பா
85. மேலது, பா - 34
86. மேலது, பா - 34
87. மேலது, பா - 37
88. மேலது, பா - 50
89. அத்வைதாந்த சுவாமிகள், 'பிரம்மானந்தயுக்திரத்னாகரம்', பக் 248 - 249
90. கி. லெட்சுமணன், 'இந்தியத் தத்துவ ஞானம்', பக் - 59 - 60
91. அத்வைதாந்த சுவாமிகள், 'பிரஹ்மானந்த ரத்னாகரம்', ப - 208
92. நாகலிங்கய்யா, 'ஆத்மநாமம்' பா - 11
93. கி. லெட்சுமணன், 'இந்தியத்தத்துவ ஞானம்', ப - 67
94. நாகலிங்கய்யா, 'ஆத்மநாமம்', பா - 12
95. மேலது, பா - 18
96. மேலது, பா - 58
97. எஸ்.கே. சுவாமி, 'ஆதிசங்கரர் விசயம்', ப - 69
98. மேலது, ப - 51
99. நாகலிங்கய்யா, 'ஏது சொருபங்காரியம்', பா - 15
100. மேலது, பா - 31
101. எஸ்.கே. சுவாமி, 'ஆதிசங்கரர் விசயம்', ப 51
102. நாகலிங்கய்யா, 'ஏதுசொருபங்காரியம்', பா - 26
103. மேலது, பா - 27
104. மேலது, பா - 29
105. மேலது, பா - 9
106. மேலது, பா - 10

●●●

# இலக்கியத் திறன்

அத்வைத தத்துவங்களைத் தமிழுக்கு அறிமுகப் படுத்தித் தத்துவத்தை மக்களிடம் பரவலாக்க வேண்டும் என்பது நாகலிங்கய்யாவின் இலக்கியக் கொள்கையாகும். இலக்கியக் கொள்கையை இரண்டு நிலைகளில் காணலாம். ஒன்று இலக்கியத்தின் பாடுபொருள். இரண்டு வெளிப் படுத்தும் வெளிப்பாட்டுக் கொள்கை. வெளிப்பாட்டு நிலையில் என்னென்ன உத்திகளைக் கொண்டு படைக்கப் படுகின்றது என்பது இலக்கியத்திறனாகும். இக்கொள்கை களும், திறனாய்வும் நாகலிங்கய்யாவின் படைப்புக்களில் காண்பது இப்பகுதியின் நோக்கமாகும்.

இலக்கியக் கொள்கையானது, ஆக்கப்பூர்வமான இலக்கிய வளர்ச்சியில் பேரிடம் பெறுகின்றது. "ஆசிரியனின் அகஉணர்ச்சிகளையும் அவன் மனதில் இடம்பெறும் உள்ளக்காட்சிகளையும் வெளிப்படுத்துவதே அகவெளிப் பாட்டுக் கொள்கை (1) என்பர். நாகலிங்கய்யா இவ்விதமான அகவெளிப்பாட்டுக் கொள்கை அடிப்படையில் தம் நூல்களைப் படைத்துள்ளார்.

"எப்படிப் படைப்பு ஆகியது என்று கோட்பாடு வகுத்துத் தருவது இலக்கியக் கொள்கை" (2) என்கிறார். ச.வே. சுப்பிரமணியன். இலக்கியக் கொள்கையைப் பற்றி எழுதிய ரெனிவல்லாக் மற்றும் ஆஸ்டின்வாரன் பின்வருமாறு இலக்கியக் கொள்கையை விளக்கியுள்ளனர். "ஓர் இலக்கியப் படைப்பு, ஒரு நூலாசிரியன், ஒரு குறிப்பிட்ட கால இலக்கியம் அல்லது தேசிய இலக்கியத்துக்குரிய தனித்துவப்பண்பை எடுத்துக்காட்ட இலக்கியத் திறனாய்வும் இலக்கிய வரலாறும் முயன்று வருகின்றன. இவ்வாறு இலக்கியத்துக்குரிய தனிப்பண்பை ஓர் இலக்கியக் கொள்கையின் அடிப்படை யிலேயே விளக்க முடியும். இன்றைய இலக்கியப்புலமைக்கு

இலக்கியக்கொள்கை மிகத்தேவை. பலமுறைகளின் இணைவே இலக்கியக் கொள்கை (3) என்று இலக்கியக் கொள்கையின் முக்கியத்துவம் கூறப்படுகின்றது.

ஆசார்யர் சங்கரர், வேதநூல்களில் காணலாகும் தத்துவங்களைத் தொகுத்து, அத்வைதம் என்று சொல்லக் கூடிய புதிய வடிவமாகத் தந்தார். அதைத் தத்துவராயர் போன்றோர் தமிழில் பாடினர். நாகலிங்கய்யாவும் தமது நூல்களில் அத்வைதத்தைப் பாடுபொருளாகக் கொண்டுப் பாடினார். இவர் இத்தத்துவங்களின் மேல் கொண்டிருந்தபற்று நூல்களாக ஆகின. படைப்பாளன் குறித்து ரெனிவெலாக் கூறும்பொழுது, "கவிஞன் ஒரு குறிப்பிட்ட தத்துவத்தின்பால் கொண்டிருந்த பற்றை கவிதையில் வரும் வெளிப்படையான கூற்றுக்களோ மறை குறிப்புக்களோ காட்டுகின்றன. அல்லது ஏதாவது ஒரு காலத்தில் புகழ்பெற்றிருந்த தத்துவத்தோடு அவனுக்கு நேரடியான தொடர்பு இருந்தது" (4) என்கின்றார். நாகலிங்கய்யா அத்வைதத்தின் மேல் கொண்டிருந்த பற்று அவரது நூல்களில் வெளிப்படையாகவே காணப்படுகின்றது. இது அவருக்கு நேரடியான தொடர்பிருந்ததால் ஏற்பட்ட அனுபவமாகும்.

## முந்துநூற்புலமை

தன் குரு முத்துராமலிங்கதேசிகர் எழுதிய 'சுவானுபவத் திருவாக்கு' என்னும் நூலில் காணும் பகுதியை விரித்து இரண்டு நூல்களாக்கியுள்ளார். அத்வைத முன்னோடிகள் கூறும் உவமைகள் பலவற்றை அப்படியே இவரும் கையாண் டுள்ளார். 'ஞானஅந்தாதி' நூலில் எண்பத்தியொரு (81) பாடல்களின் முடிவிலும் என்றார், சொன்னார், சொன்னான் ஐயன், விளம்பினரே, அருளினரே, அறைந்தான், வகுத்தான், உரைத்தான், அருளிச் செய்தாரே என உரைக்கின்றார். இவை இவரது முந்துநூல் புலமையைக் காட்டுகின்றன. 'என்றார்' என்று கூறுவதே அதிகளவில் காணப்படுகிறது. சான்றாக

"ஆகின்ற வுபசாந்தமதனிற் காண்பானற்பமதாங் காட்சிகளுமில்லை
யென்றார்"

இப்பாடல் 'என்றார்' என்று முன்னோர் கூறியதைக் கூறுமுக மாக அமைக்கப்பட்டுள்ளது.

உக்திமுறை

ஞான அந்தாதி நூலில் காணப்படும் எண்பத்தியொரு பாடல்களையும் குருவின் கருத்தைக் கூறும் நிலையில் பாடியுள்ளார். மீதியுள்ள பாடல்கள் குருவைப் போற்றும் பாடல்களாகவுள்ளன.

பஞ்சகோசம் எனும் நூலில் கூறப்படும் கருத்துக்கள் இரண்டு நிலைகளில் காணப்படுகின்றன. அவை 1. நேரடியாகத்தன் கருத்தைச் சொல்லுதல். 2. மைந்தனுக்குக் கூறுவதாகச் சொல்லுதல்.

இந்நூலில் மைந்தனுக்குச் சொல்லவதாக அமைந்த பாடல்கள் மிகுதியாகவுள்ளன. மைந்தனை விளித்து முன்னிலையாக வைத்துக் கூறுவது போல் செய்யுள்கள் அமைக்கப் பட்டுள்ளன. இதனை,

"யொரு நாளுமறியாத விஞ்ஞானமயகோச மோதினா மன்று மைந்தா" (5)

"ஞானமின் மகனே! கேளாயான்றிய சுழுத்தியற்ற" (6)

"வசமற நாமன்றென்று வரையறுத்தறிவாய் மைந்தா" (7)

என்ற பாடல்கள் மூலம் அறியலாம்.

ஆத்மநாமம் நூலிலும் இரண்டு உக்திமுறைகளுள்ளன. அவை 1. பிறர் கருத்தைச் சொல்லுதல் 2. நேரடியாகத் தன் கருத்தைச் சொல்லுதல் என்பதாகும். தலைப்பாகப் போடப் பட்டிருக்கும் நாமத்தை ஒவ்வொரு செய்யுளிலும் விளக்கி, இறுதியில் அந்நாமத்தின் பெயரையும் சுட்டுவர். இது படிப்போர்க்கு இன்பம் பயப்பதாக இருக்கின்றது.

ஏதுசொரூபங்காரியம் நூலில் காணப்படும் உக்தி ஆசிரியர் நேரடியாகவே தன் கருத்துக்களை விளக்கிக் கூறுவதாக அமைந்துள்ளது. தத்தவங்களையும், . மோட்சம் பெறச் செல்லும் மார்க்கம் குறித்தும் அழகுபட நேரிடையாகக் கூறுகின்றார்.

மரபுவழிப்பட்ட சொற்கள்

இலக்கியங்கள், மரபு வழியாக வந்த சொற்களைக் கொண்டே எழுதப்படுகின்றன. மரபு நெறியிலிருந்து சிறிதளவும் திரிதல் கூடாது. "மரபு நிலை திரியின் பிரிது பிரிதாகும்" (8) என்பார் தொல்காப்பியர். மரபு நிலை திரிந்தால் உலகத்துச் சொற்கள் தன் உண்மைப் பொருள் இழந்து மாறி நிற்கும்.

நாகலிங்கய்யா, அத்வைத முன்னோடிகள் கையாண்ட மரபுவழிப்பட்ட சொற்களை தமது நூலிலும் பயன்படுத்து கின்றார். வடமொழியில் எழுதப்பட்ட அத்வைதக் கருத்துக் களில் சிலவார்த்தைகள் தமிழில் அப்படியே மொழிபெயர்க்கப் பட்டன. அதை அந்த மரபுப்படியே பயன்படுத்துகின்றார், இதனை,

"நனவு கனவு சுழுத்தி தனினாளும்" (9)

"ஞான ஆன்மா வறிந்து" (10)

"பஞ்ச கோசம்" (நூலின் தலைப்பு)

"முன்பின்னு அதிட்டானமாகத்" (11)

"பழுதைப் பாம்பது முன்பின்" (12)

"என்றுமே பிரபஞ்சந்" (13)

"வரைக்கும் சவணஞ் செய்தல்" (14)

என்ற வரிகள் மூலம் அறிய முடிகின்றது.

## வடமொழிச்சொற்களைக் கையாளுதல்

வடமொழிச் சொற்களைத் தேவையான இடங்களில் மட்டுமே நாகலிங்கய்யா பயன்படுத்தி உள்ளார். கோவிலூர் மடத்தில் பாடம் சொல்லிக் கொடுத்த முறையும், முந்து நூல்களில் ஆழ்ந்த புலமையும் இவ்வடமொழிச் சொற்களைக் கையாள்வதற்கு வழிவகுத்துள்ளன. வடமொழிச் சொற்களை முறையாகத் தமிழில் எழுதி உள்ளார். கிரந்த எழுத்துக்களை ஏற்று எழுதும் கொள்கை உடையவராக இருந்திருக்கின்றார். இதனை,

"மந்தமிலாவானந்த வஸ்துத்தானே" (15)

"நின்ற வஸ்துவதாய் விபுவாகி" (16)

என்ற பாடல்கள் தெரிவிக்கின்றன. நாமம் சனனம், ரூபம், மோட்சம், பிரபஞ்சம், சகம், விட்சேபம், கிருபை, மித்தை போன்ற வடமொழிச் சொற்களையும் பயன்படுத்தியுள்ளார்.

## தன்கால வழக்குச் சொற்களைக் கையாளுதல்

செய்யுள்களின் அழகுக்கும், தளை போன்றவை சிதையும் இடங்களிலும் தன்கால வழக்குச் சொற்களை எடுத்தாண்டிருக்கின்றார்.

நாகலிங்கய்யா

"லொரு சணிகமுறுமாகில் 'ஒருக்காலும்' பின்" (17)

எனும் பாடலில் ஒருக்காலும் என்ற சொல் 'ஒருமுறையேனும், எனும் சொல்லிற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. சித்திரத்தைத் சித்ரம் (ஞானஅந்தாதி - 66) 'முட்டாள்' என்பதை முடாள் (ஞானஅந்தாதி - 34) என்றும், 'மாத்திரம்' என்பதை மாத்ரம் (ஞான அந்தாதி - 37) என்றும் கூறுவர்.

நாகலிங்கய்யா தம் நூல்களை இலக்கியக் கொள்கை யினைப் பயன்படுத்தி அழகுற எழுதியுள்ளார். இவ்விலக்கியக் கொள்கை. அவரின் வெளிப்பாட்டு நிலையினை நன்கு எடுத்துக் காட்டுகின்றது. தமது இலக்கியத்தைச் சிறந்த இலக்கியமாகவும் நிலைத்த இலக்கியமாகவும் ஆக்கிப் படிப்பவர்களின் நெஞ்சத்தில் இடம் பெறுகின்றார்.

## இலக்கியத் திறன்

"வாழ்க்கையில் இலக்காக அமைவது இலக்கியம். வாழ்வின் இலக்கு எது என உணர்த்துவது. வாழ்வின் இயல் பினை இயம்புவது இயல்பான வாழ்க்கையையும் சிறப்புடைய தாக இலங்கச் செய்வது. ஒவ்வொரு தனி மனிதனின் வாழ்வினையும் இலக்கு ஆக்குவது இலக்கியம் (18)" என்பார் ச.வே. சுப்பிரமணியம். இலக்கியம் வாசகனை எந்தவிதத்தி லாவது பண்படுத்தப்படவேண்டும். இது இலக்கியத்தின் பயனாகும்.

ஆசிரியர் தம் உள்ளத்தில் எழுந்த அனுபவங்களை காலத்தில் பெறப்பட்ட உணர்வுகளோடு இலக்கியம் படைக்க வேண்டும். அதை வாசிக்கும் வாசகனும் அவ்வுணர்வுகளைப் பெற வேண்டும் இதை "வாழ்க்கையின் அனுபவமாய்ப் பெற்ற உணர்ச்சியைத் திரும்பக் கொணர்ந்து பாட்டாக வடிக்க வல்லாரே கற்பனையில் உணர்ச்சியைப் பெற்றுப் பின்னர் பாட்டில் கொணர்ந்து தருதலிலும் வல்லவராவர்"(19) என்பார் மு.வ. அதுபோல் நாகலிங்கய்யா, தன் வாழ்க்கையில் பெற்ற அனுபவங்களை உணர்ச்சி பொங்கப் பாடல்களாகப் புனைந் துள்ளார். இயைபாகவும், படைப்பு நிலையிலும், கற்பனையைக் கலந்து பாடல்கள் இயற்றியுள்ளார்.

### கற்பனை நயம்

இலக்கியத்திலுள்ள கற்பனை வாசகனுக்கு சுவையூட்டு வதாகவும், மேலும் படிக்க வேண்டும் என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கக் கூடியதாகவும் அமையும். "கற்பனை என்பது கற்பித்துக் கொண்டு பேசுவது இருப்பதையே சிறிது உயர்வு நவிற்சியாகவும் சொல்லலாம். உண்மையையே கவர்ச்சி யாகவும் சொல்லலாம் என்றோ, நடந்ததை அல்லது அனுபவித்ததை நினைவிற்குக் கொண்டு வந்து அப்போது நடப்பதாய்க் கற்பிப்பதும் கற்பனையை எதை அழகுபடக் கற்பித்துச் சொல்லு கின்றோமோ அதெல்லாம் கற்பனையே. இயற்கைப்புனைவும் ஒரு கற்பனையே (20) என்பார். வெ.சு. அழகப்பன். கற்பனை, படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை, என்று மூன்று வகைப் படும் என்பர். இல்லன படைத்தலும் கற்பனையின் வகையில் அடங்கும். இவ்வகையான கற்பனைகளை நாகலிங்கய்யாவும் கையாண்டுள்ளார்.

### படைப்புக் கற்பனை

வெவ்வேறு இடத்தில் கண்ட, வேறுபட்ட இரண்டு காட்சிகளை ஒன்றாக இணைத்து அமைப்பது படைப்புக் கற்பனையாகும். இக்கற்பனையை நாகலிங்கய்யா பல பாடல்களில் புனைந்துபாடியுள்ளார். மனிதர்கள் சம்சாரம் (மனைவி) என்ற சோகத்தின் வடிவில் எப்போதும் மயக்கம் கொண்டுள்ளனர். பெண் மோகம் இல்லாது இவர்களால் வாழ முடியாது. இதைக்கண்ட நாகலிங்கய்யா, தாம் என்றோ, எங்கோ க்ண்ட ஒரு காட்சியைக் கற்பனையாக இணைத்துப் பாடுகின்றார். பன்றியானது சுகமென்று நினைத்துசாக்கடையில் கிடந்து உழலும். அதுபோல மனிதர்கள் சம்சாரச் சாக்கடையில் உழல்கின்றனர் என்கின்றார். இங்கு ஆசிரியரின் படைப்புக் கற்பனை வெளிப்படுகின்றது அப்பாடலில் மூடரை,

> "என்றுமே சோகமதாஞ் சமுசாரத்தி னெண்ணரிய துன்பமெலா
> மோகத்தாலே
> நன்றிதெனப் பன்றியுமே யமேத்தியத்தில் ரமிப்பது போல் ரமிக்கின்ற
> மூடர்" (21)

என்கின்றார். நாட்டுப்புறங்களில் "மருத்துவர் மகன் சீக்காளி," "வாத்தியார் மகன் மக்கு" என்ற பழமொழி இன்றும்

வழக்கத்தில் இருக்கின்றது. இப்பழமொழிக் கருத்து ஒரு மூடநம்பிக்கையே. இதை ஒரு பாடலில்,

"சற்றுமில்லாவிடில் உபாத்தியாரிருக்கினுந் தனையர்கள் படித்தலிலை" (22)

என்பார். இவ்வுவமை எதைப் போலென்றால் தேரைச் செலுத்துகின்ற சாரதியைத் தேரின் எஜமானன் ஏவும் சுதந்திரம் இல்லாததைப் போன்றது ஆகும். இரண்டு இடங்களில் கண்ட இரண்டு காட்சிகள் இந்த ஒரே பாடலில் தம் கருத்தைக் கூறுவதற்கு இடமாக வந்தது. இது படைப்புக் கற்பனையாகும்.

நாகலிங்கய்யா, கடல் அலை வருவதையும் அதில் குளிக்கும் முறையையும் அனுபவமாய் பெற்றிருக்கின்றார். இந்த நிகழ்ச்சியானது 'ஞானஅந்தாதி' நூலில் படைப்புக் கற்பனையாகக் கூறப்பட்டுள்ளது.

"ஆரான சலதியின்முன் னலைநீங்கிப்பின் னலைவருமுன்

சலதியதேயமர்தல் போல" (23)

என்ற பாடல் மூலம் அறியலாம். அலை வந்து சென்ற பின்பு, மற்றொரு அலையானது கரையை நோக்கி வரும் அப்போது தண்ணீருக்குள் அமர்ந்து (குனிந்து) கொண்டால் அலை நம்மை ஒன்றும் செய்யாது. எதிர்த்து நிற்கும் நிலையில் அலையின் வேகம் நம்மை இழுத்துச் சென்றுவிடும். இந்தக் காட்சியை அத்வைதத் தத்துவத்தை ஒப்பிட்டு இங்குக் கற்பனையாகப் படைத்துக் காட்டி உள்ளார்.

உலகில், சிவன் பல உருவங்களைப் பெற்றிருக்கின்றன. அவை எல்லாம் ஓரே ஒப்பில்லாத பரம்பொருளாகும். இந்த அத்வைதக் கருத்தை விளக்கும் பொருட்டு ஆசிரியர் தம் வாழ்வில் கண்ட காட்சிகளைக் கற்பனையாகப் படைக்கின் றார். அக்காட்சி கூறவிரும்பிய கருத்தை எளியதாகப் புரியவைத்திருக்கிறது. இதனை,

"நாட்டமான கடகலச நாநாவாயு மண்ணொன்றாம்

வேட்டு கடகமகுடாதி வெவ்வேறாயும் பொன்னொன்றா

மீட்டிவாலாவாள் பலவா யிருந்து மயமொன்றாமவை போற்

றேட்டுபி - பரசீவ செகங்களாயினும் மேகம்" (24)

என்ற பாடல் மூலம் அறியலாம். மண் ஒன்று. ஆனால் கலசம் பல. பொன் ஒன்று. ஆனால் மகுடம் பல. இரும்பு ஒன்று.

ஆனால் கருவிகள் பல. இதைப் போல் பிரம்மம் ஒன்று உருவங்கள் பல என்கின்றார். இங்கு படைப்புக்கற்பனை பயன்படுத்தப் பட்டுள்ளது.

"பரமான ரதமிருக்கும் பரியதற்கனியம் போலும்

பெரிதான வுடலை யாட்டும் பிராணனாமான்மா வேறாய்" (25)

என்ற பாடலில், என்றோ ஒரு நாள் கண்ட இரதத்தின் அமைப்பானது, உடலின் அமைப்புக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இரதத்தில் குதிரையானது அன்னியப்பட்டே காணப்படும். அதே தன்மையினைப் போன்றதே உடலும். உடலிலிருந்து ஆன்மா என்றும் அன்னியப்பட்டே காணப் படும். இந்த இரண்டு பண்புகளையும் இணைத்து புதிய வடிவத்தைக் காட்டியிருப்பது கற்பனையின் சிறப்பாகும். இதே போல்,

"சாரதிக்கு எசமானன் வேறதாய்ச் சார்ந்திருத்தல் போல்" (26)

"அழகான வதைகொடுப்போன் அன்னியமாதல் போல்" (27)

என்ற பாடல்களும் படைப்புக்கற்பனையைக் கொண்டிருக் கின்றன. 'தன்னுடைய அனுபவத்தில் கண்ட பண்புகளைக் கவிஞன் ஒருவன், எத்தகைய கட்டுப்பாடும் இல்லாமல் தானே தேர்ந்தெடுத்து அவற்றை ஒன்றாக இணைத்துப் புதியதொரு முழு நிறைவான வடிவத்தைப் படைத்துக் காட்டுந்திறனே படைப்புக் கற்பனையாகும்' என்பர் க.த. திருநாவுக்கரசு. நாகலிங்கய்யாவும் தன் அனுபவத்தைக் கட்டுப்பாடு இல்லாமல் அத்வைதத் தத்துவத்தோடு இணைத்துப் பாடிச் சிறப்பித்துள்ளார்.

**இயைபுக் கற்பனை**

"இருவேறு காட்சிகளை உணர்ச்சி ஒற்றுமையால் இணைந்து அமைக்கப்படும் கற்பனை இயைபுக் கற்பனை எனப்படும்" (29) நீருக்குள் மூழ்கியவன் அதற்குள் மூழ்கிப் போய்விடுவான். நீர் எவ்விதமான பற்றும் இல்லாமல் இச்செயலைச் செய்யும். அதே போல் வானத்தில் மேகங்கள் வரும், செல்லும் ஆனால் வானம் பற்றற்று இருக்கும். இவ்விரண்டு காட்சிகளும் இயற்கையானது. 'பற்றற்ற நிலை' யாகிய உணர்ச்சியை விளக்கவல்லது. ஆசிரியர் இவ்விரண்டு காட்சிகளையும் இணைத்துக் கருத்தைக் கூறுமுகமாக

உணர்ச்சி ததும்பக் கூறுகின்றார். இதனை,

"சலமது முழ்கியவன்பேரிற் சலம்பற்றுதல் போற் பற்றின்றி
நிலவிய சகமதினுள் வெளியு நிறைவாகியதனின் மூழ்கியதாஞ்
சொலவாந்தூல சரீரமுதற் சுத்தம் வரைப் பிரபஞ்சத்தி
னலமாம்வான் போற்பற்றற்று நாளுமிருந்தனி ரஞ்சனமே"

என்கின்றார். இப்பிரபஞ்சமானது, தூலசரீரம் முதலாகச் சுத்தம் வரையில் அடக்கமுடையதாக இருக்கின்றது. பிரபஞ்சத்தின் வடிவங்களே அனைத்தும். பிரபஞ்சம் சீவன்களைப் பிரித்துப் பார்ப்பதிலை. அதேபோல் சலமும் அதனுள் மூழ்கியவன் மேல் பற்றுக் கொள்வதில்லை. வானமும் இத்தன்மையினைக் கொண்டதாகும். இப்பாட்லில் பற்றற்ற உணர்வானது இரண்டு காட்சிகள் மூலம் வளர்க்கப் படுகின்றது.

## இல்லன படைத்தல்

இல்லன படைத்தல் என்பது, ஆசிரியர் ஒரு கருத்தைக் கூறவிழையும் போது உலகில் இல்லாததைப் படைத்துக் காட்டி அதன் மூலம் தன் கருத்தைக் கூறுவதாகும். இதனை மு. வரதராசனார் "எக்காலத்திலும், எவ்விடத்திலும் இல்லாததைப் படைத்துக் கொள்ளும் கற்பனைத் திறனும் உண்டு. அது முற்றிலும் இல்லாத ஒன்றைப் படைக்கக் கற்பனையாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது அன்று. அதுவும் ஓரளவு உள்ளதன் அடிப்படையில் இல்லது படைத்தல் கற்பனையாகும். உள்ளதை நேரே அடிப்படையாகக் கொள்ளாமல் அதைத்திரித்து அமைத்துக் கொண்ட கற்பனையாகும்" (31) என்பர்.

நாகலிங்கய்யா, பல பாடல்களில் இல்லன படைத்தல் கற்பனையைப் பாடியுள்ளார். வேத நூல்களில் காணலாகும் அரிய உவமைகளைப் பயின்றதன் விளைவாக, இவர் நூலிலும் இவை இடம்பெற்றிருக்கலாம், "ஞாளி என்ற மிருகமானது பல காலமாகக் கூறிவரக்கூடியப் பொய்யான உயிரினமாகும். இம்மிருகத்தின் உருவத்தைச் சில திருக்கோயில்களில் இன்றும் காணமுடிகின்றது. இவை கற்பனையால் வடிக்கப்பட்ட உருவமாகும். இம்மிருகம் குறித்தும், நரகம் குறித்தும் கூறுகின்றார். இதை,

"மிக்கதோர் சொரூபமந்த விடயங்கண் ஞாளி தின்று

கக்கியவசனம் போலுங் காலாக்கினி நரகம் போலுஞ்" (32)

என்ற பாடல் சுட்டும். இக்கற்பனை இல்லன படைத்தலாகக் காணப்படுகின்றது. தேவர்கள் பயன்படுத்தும் பொருள்களில் ஒன்று 'தேவாமிர்தம்' ஆகும். இது தன்னளவில் இன்பமயமான தாகவும், அருந்துவர்களுக்கு இன்பமயமான தாகவும் இருக்கின்றது. இதனை,

"தானின்பவடிவமாகித் தனையடைந்தவர்க்குமின்ப

மானதைக் கொடுக்குந்தேவா வமிர்தத்தைப் போல ஆன்மா" (33)

என்ற பாடலில் விளக்குகின்றார். ஆன்மா தன்னை அடையும் பஞ்சகோசங்களுக்கு இன்பம் தரும். அதுபோல தேவாமிர்தம் இருக்கும் என்று இல்லன படைத்தல் கற்பனையைக் கூறியுள்ளார்.

## கருத்து விளக்கக் கற்பனை

"இயற்கைக் காட்சிகளைக் கண்ணுற்ற கவிஞன் தான் கண்டவற்றை அப்படியே கூறாது அக்காட்சிகளால் தன் உள்ளத்தில் கிளர்ந்தெழும் உணர்ச்சிகளை மட்டிலும் சித்தரித்ததால் அதனைக் கருத்துவிளக்கக் கற்பனை என்று கூறலாம்" (34) என்கிறார் ந. சுப்பு ரெட்டியார். இக்கருத்து விளக்கக் கற்பனை நாகலிங்கய்யா பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

வானத்தின் தன்மையினைப் பாடாத கவிஞர்களே இல்லை எனலாம். நாகலிங்கய்யாவும் வானத்தைப் பார்க்கின் றார். அது இவ்வுலகில் பற்றற்று நிற்கும் ஒன்றாக இருக்கின்றது என்கின்றார். வானம் நிலையானது தான். அக்காட்சி தம் உள்ளத்தில் ஏற்படுத்திய கிளர்ச்சியை,

"வான் போல் பற்றற்று" (35)

"வானமது போற் தொடர்பற்று" (36)

"வானமிடை வெளியற்று இருத்தல் போல" (37)

"வானஞ் சாதுர்ப்பூதமதின் மருவாமல் தான் இருப்பது போல்" (38)

"வருகின்ற ராகத்து வேடநீக்கின் வானம் போற்

பேதமிலாத பேதமாக" (39)

என்ற பாடல்கள் மூலம் விளக்குகின்றார். வானத்தில் கந்தருவநகரம் என்பது கானல் நீருக்கு ஒப்புமையுடையதாகும். நன்கு வெய்யில் அடிக்கும் சமயத்தில் தூரத்தில் நீர் இருப்பது போன்று தெரியும். ஆனால் அதனருகே சென்றால் நீர் இருக்காது. இதைக் 'கானல் நீர்' என்கின்றனர். இத்தன்மை யினையுடையது கந்தருவநகரம். நாகலிங்கய்யா அதை உடலுக்கு உவமையாகக் கூறுகின்றார். இதனை

"ஆனதனில் விளங்குகின்ற சரீரமாதி யறிவதனில் விவர்த்தமதாய்த்
தோன்றலாலே
வானதனிற் கந்தருவ நகரம் போலும் வளர்கானனீர் போலு மருவப்பட்ட"
(40)

என்ற பாடலில் சுட்டிக் கூறுகின்றார். நாகலிங்கய்யாவின் கருத்து விளக்கக் கற்பனைகள் தத்துவங்களை எளிமையாகப் புரிந்து கொள்வதற்குப் பயன்படுகின்றன.

**உவமை நலம்**

இயற்கையாக மனிதனிடம் அமைந்த இயல்புகளில் ஒன்று பார்க்கும் பொருள்களை ஒன்றுக்கொன்று ஒப்பிட்டுப் பார்ப்பதும் உவமையாகக் கூறுவதும் ஆகும். ஒரு நூலைப் படைக்கும் ஆசிரியன் தான், சொல்ல நினைக்கும் கருத்தை மரபுவழிப்பட்ட பல உத்திகளின் மூலம் வெளிப்படுத்துவான். அவ்வுத்திகளில் உவமையாகக் கூறுவதும் ஒன்றாகும். ஆசிரியன் தான் சொல்ல வந்ததைப் பிறர் புரிந்து கொள்ளு மாறும் அழகாகவும் எளிமையாகவும் சொல்ல வேண்டும், அதற்கு மிகச் சிறந்த கருவி உவமை என்பதில் சிறிதும் ஐயமில்லை. உவமை என்பது கவிஞனின் அனுபவப் பொருளாகும். பொருள் என்பது அவன் காணும் புதிய பொருளாகும் (41) என்கின்றார் இரா. சீனிவாசன். "ஏதாவது ஒரு காரணத்தால் ஒரு பொருளோடு ஒப்புமை உடைய இன்னொன்றினை ஒப்புமை நோக்கில் எடுத்தும்கூறும்பொழுது அது உவமையாகிறது" (42) என்பர் பொற்கோ.

நாகலிங்கய்யா, அத்வைதக் கருத்துக்களை எளிய தமிழில் எழுதவேண்டும் என்று நினைத்து உவமைகளுடன் அதை எழுதி உள்ளார். உவமையுடன் கூறினால் தான் அது மக்களைச் சென்றடையும் என்று எண்ணி இருக்க வேண்டும். மற்ற அத்வைத நூல்களில் காணாத அளவிற்கு, இவர் உவமைகளைக் கூறிக் கருத்துக்களை விளக்குகின்றார்.

உவமை என்பது பொருளின் தன்மையைப் புலப்படுத்துவது என்பது தொல்காப்பியர் கருத்தாகும்.

"வினை, பயன், மெய், உரு என்ற நான்கே
வகை பெற வந்த உவமைத் தோற்றம்" (43)

எனத் தொல்காப்பியர் உவமையின் வகைகளைச் சுட்டுவார்.

"பண்பும் தொழிலும் பயனுமென்றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளோடு பொருள் புணர்ந்து
ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை" (44)

என உவமை குறித்துத் தண்டியலங்காரம் கூறும்.

**பண்பு உவமை**

பண்பு காரணமாக ஒன்றாகிப் பொருளோடு பொருள் இயைய வைத்து ஒப்புமை புலப்படப் பாடுவது பண்பு உவமையாகும். நாகலிங்கய்யா பண்பு உவமையைப் பயன்படுத்திப் பல பாடல்கள் எழுதியுள்ளார், கழனிப்பதியில் (கோவிலூரில்) அடியார்கள் சூழ, முத்துராமலிங்கதேசிகர் வீற்றிருக்கின்றார், அவரோடு, அடியார்கள் பலரும் உள்ளனர். இக்காட்சி நட்சத்திரங்களோடு இருக்கும் சந்திரனை ஒப்பதாக இருக்கின்றது என்று கூறுகின்றார்.

"குன்றாதிங் குண்டெனவே யுடுக்கள் சூழ்ந்த
குறைவிலாச் சந்திரனுக்கு கொப்பதாக,
நன்னுறவே கழனியின் கண்ணடியரோடு நாயேனையாட்
கொண்ட நாதன் சொன்னான்" (45)

என்பது பாடல் ஆன்மாவானது பஞ்சகோசம், அவஸ்தை போன்றவற்றிலிருந்து நீங்கிப் பிரகாசமாக இருக்க வேண்டும் என்ற தத்துவத்தைச் சூரியனை உவமையாகக் கூறி விளக்குகின்றார்.

"தானுமே பிரகாசமதாகியுஞ் சடமதாங் கடமாதி விளக்கிடும்
பானுபோற் பிரகாசமதாகியே பங்கமின்றியிருந்தைந்து கோசமும்" (46)

**தொழில் உவமை**

தொழில் காரணமாகப் பொருளோடு பொருள் இயைய வைத்து ஒப்புமை புலப்படப் பாடுவது தொழில் உவமையாகும். அடர்ந்த காட்டில் சிறிய கனலை வைத்தால் போதும்

அக்காடு முழுவதும் அழிந்துவிடும். காடுமட்டுமல்ல, வைத்த கனலும் அதில் காணாமல் போய்விடும். அதை

"காட்டமதிற் செனித்த கனல் காட்டமதைச் சுட்டுக்
காட்டமுடன் அக்கனலும் அழிவதுவே போல" (47)

என்ற பாடலில் குறிப்பிடும் அத்வைதத்தத்துவத்தை விளக்குகின்றார். இங்கு தொழில் இரண்டு பொருள்களுக்கும் இடையே ஒப்புமையாக வந்தது. அத்வைதத் தத்துவங்களைச் சொல்லும் நிலையில் தொழில்உவமையினை அதிகளவில் கூறுகின்றார். பார்க்கும் காட்சியானது உவமையாகச் சொல்லப் படுகின்றது. இதனை,

"நிரையுள்ள கூத்தாடி தனக்கொப்பாக நியமிக்கக் கூத்து நிலையில்லாதே போல்" (48)

"இன்பம் போல் கொல்லாமல் கொல்லவரும் விவேகியானோன்" (49)

என்ற பாடல் வரிகள் கொண்டு உணரலாம்.

### பயன் உவமை

பயன் காரணமாகப் பொருளோடு பொருளினை வைத்து ஒப்புமை புலப்படப்பாடுவது பயன் உவமை ஆகும். திருவள்ளுவர்,

"ஊருணி நீர் நிறைந்தற்றே - உலகவாம்
பேரறிவாளன் திரு" (பா - 215)

என்பர். நாகலிங்கய்யாவும், நல்ல மனம் படைத்த பெரியோர் களிடம் வந்தசெல்வமானது பயனுடையதாகும். அது எத்தன்மையுடையது என்றால் ஒரு அழகான ஊரின் நடுவாக குளம் (தடாகம்) ஒன்று இருப்பதைப் போன்றதாகும். நல்ல மனம் இல்லாத மயக்கமுடை யோரிடத்து பொருள் சேர்ந்தால் அது, நகர் நடுவில் எட்டி (மரம்) வளர்ந்தது போலாகும் என்பதை,

"அவளுடைய பெரியோர்க்குச் செல்வம் வந்தால்,
அழகான நகர் நடுவிற்றடாகம் போல,
மருளறவேயுதாரமுடனிரக்கந்தோன்று மயக்கமுடையோர்
இடத்தினிதகள் சேர்ந்தாற்
றிருவான நகர்நடுவில் எட்டிபோலச் சிறப்படையாதி
தலினாற் செல்வம் பெற்றார்க்கு
அருளானவுதாரமுடனிரக்கஞ் தோன்றா தவிவேகத்தா
லாகுமறிவாயென்றார்." (50)

என்ற பாடல் விளக்கி நிற்கும்.

பலபொருள் உவமை

"பலபொருள் உவமை என்பது ஒரு பொருட்கு பலவுவமை சுட்டுவது" (51) என்கின்றது தண்டியலங்காரம். சிவனைப்பற்றி விளக்கும் போது நாகலிங்கய்யா சிவன் பலவாறான வடிவில் இருக்கலாம். ஆனால் அவை ஒன்றே என்கின்றார். இதனை விளக்க பலபொருள்களை உவமையாக ஒரே பாடலில் கூறுகின்றார். அப்பாடலானது,

"நாட்டமான கடகலச நாநாவாயு மண்ணொன்றாம்
வேட்டு கடகமகுடாதி வெவ்வேறாயும் பொன்னொன்றா
மீட்டிவாலாவாள் பலவாயிருந்தும் மயமொன்றாம் அவைபோற்
றேட்டு பி - பரசீவ. செகங்களாயினும் மேகம்" (52)

என்கின்றது. கலசம் பல ஆனால் மண் ஒன்றுதான் மகுடம் பல. ஆனால் பொன் ஒன்றுதான், கருவி பல. ஆனால் இரும்பு ஒன்றுதான். அவைபோல சிவன்களின் வடிவம் பலவாக இருப்பினும் 'பரம்' ஒன்றே ஆகும். மேலும் ஒரு பாடலில்,

"நன்றானபு மானன்றித் தறியே போலு
நலமான ரசிதமின்றிக் கிளிஞ்சல் போலும்" (53)

என்கின்றார். தன் குருவான முத்துராமலிங்கத் தேசிகரின் குணநலன்களைப் பல்வேறு புராண கதாபாத்திரங்களின் தன்மையோடு ஒப்பிட்டுக் கூறுகின்றார். அப்பாடல் பல பொருள் உவமைக்கு சிறந்த உதாரணமாகத் திகழ்கின்றது.

"மணியான பொறுமையினிற் றருமர்போலு மலர்வான
கொடையதனிற்ற தீசிபோலுந்
துணிவான வாக்கரிச்சந்திரனே பாலுஞ் சுகமான
லீலைதனிற் கிருஷ்ணன் போலுந்,
திணியான ஞானமதிற் சனகன் போலுஞ் சிவபணியிற்
றிருநாவுக்கரசே போலுந்
மணியான போதனையில் வசிட்டர் போலும்
அடுத்த முத்துராமர் திருவருளை போற்றி" (54)

இப்பாடல் பல்வயிற்போலியுவமை என்ற உவமையணிக்குச் சான்றாகக் கூறலாம். பலவயிற்போலியுவமை என்பது ஒரு தொடர் மொழிக்கண் பல உவமை வந்தால் வந்த உவமை தோறும் உவமைச்சொற் தோன்ற புணர்ப்பது ஆகும்.

அத்வைதிகள், கானல்நீர், பழுதையைப் பாம்பெனக் காணுதல், வெள்ளியெனச் சிப்பியை நினைத்தல், என்ற

கருத்துப்புலப்பட பல உவமைகள் கையாள்வர். இதைப் போல நாகலிங்கய்யாவும் தமது பாடல்களில் இவ்வுமைகளை எடுத்தாள்கின்றார், இதனை,

"பழுதைப் பாம்பது முன்பின் நடுவுமே அன்றி பதார்த்தங்ள்

இருத்தலையும் கொடாததே போல்" (55)

"கானலிற் சலமும் முன்பின்" (56)

"சொன்னவொரு பழுதையின் வந்த சற்பஞ் சுத்தமதாம்

பழுதையெனச் சொல்வதே போல்" (57)

"நன்றான புமானன்றித் தறியே போலுந்

நலமான ரசிதமின்றிக் கிளிஞ்சல்போலும்" (58)

என்ற பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. பல உவமைகளை ஒரே பாடலில் அடுக்கிக் கூறுதல் என்பது ஆசிரியரின் புலமைத் திறனைக் காட்டும் பண்பாகும். நாகலிங்கய்யா இப்பண்பைப் பல பாடல்களில் வெளிக்காட்டியுள்ளார்.

"நன்றானபு மானன்றித் தறியே போலுந்

நலமான ரகிதமின்றிக் கிளிஞ்சல்போலும் (59)

"அன்றான முலைத்தாதி கதையே போலுநலமான

காதி முனி கனாவைப் போலும்" (60)

"ஞாளிதின்று கக்கிய வசனம் போலும்

கலாக்கினி நரகம் போலும்" (61)

என்னும் பாடல்களைக் கொண்டு தெளியலாம்.

இலக்கியமானது சிறப்புற்று வாழ வழிசெய்வன. உவமைகள் ஆசிரியன் தான் கூற நினைத்த கருத்தைத் தன் அனுபவத்ததால் பெற்ற காட்சிகளைக் கொண்டே கூறுவான். நாகலிங்கய்யாவின் நூல்கள் அனைத்திலும் சீரிய உண்மைகள் பொருத்தமான உவமைகளாக அமைந்து படிப்போருக்கு இன்பம் தருகின்றன.

## சொல் நயம்

கவிஞன் தன் கருத்தையும் உணர்வையும் சிறப்பான சொற்களால் வெளிப்படுத்துகின்றான். "உயர் கவிதைகளில் சொற்கள் கேவலம் அரூபமான கருத்துச் சாயைகளை மட்டும் குறித்து நிற்பன அல்ல. கவிதையிலே பயிலும் சொற்கள், உரை

நடையில் வருவனவற்றைவிட ஆற்றல் மிக்கவை. கவிதையிலே அதான் சொற்கள் பூரணத்துவத்தை அடைந்துள்ளன" (62) என்று கூறுவர். நாகலிங்கய்யா சொற்களைத்தக்க இடத்தில் கையாண்டு பாடல்களுக்கு இனிமையூட்டி உள்ளார்.

தன்னுடைய குருநாதரைப் பற்றிச் சொல்லும் இடந்தோரும் பெயருக்குமுன் அடைமொழி கொடுத்துச் சொல்லுகின்றார். இவ்விதம் சொல்லும் பாங்கில் சொல் நயத்தைக் காணமுடிகின்றது. இதனைத் 'திகழ்முத்து ராமையன்' (ஞானஅந்தாதி - பா - 11) 'ஞான வடிவான முத்துராமலிங்க குரு' (ஆத்ம நாமம் - 10) 'முத்தனே முத்துராம முதல்வனே' (ஞான அந்தாதி - 2) 'பவமகற்று முத்தய்ய முதல்வன்' (ஞானஅந்தாதி - 93) வையர் முத்துராமர் (ஞான அந்தாதி - 99) அருளுமுத்து ராமலிங்கேசா (ஏதுசொரூபங் காரியம் - 2) என்று கூறும்பாங்கால் அறியலாம். ஆன்மாவிற்குப் 'பரஆன்மா' என்று பல இடங்களில் அடை கொடுத்துக் கூறுகின்றார்.

## ஓசை நயம்

செய்யுள் இயற்றும் ஆசிரியர்கள், செய்யுள்களில் எதுகை, மோனை முதலிய தொடைநயங்களைப் பயன்படுத்தித் வந்துள்ளனர். நாகலிங்கய்யாவும், தம் நூல்களில் அழகாகத் தொடை நயங்களைப் பயன்படுத்தி உள்ளார். செய்யுளில் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது எதுகையாகும். இதனை யாப்பெருங்கலக்காரிகை. 'இரண்டாம் வழுவா எழுத்தொன்றின் மாதே எதுகை' (63) என்று குறிப்பிடுகின்றது.

"அருள் வடிவே யச்சுதனே யமலா போற்றி
யடுத்தவரைச் சிவமாக்குமன்பே போற்றி,
பொருண்மு முதுங் கடந்த பரம்பொருளே போற்றி
போதவடிவாயெழுந்த புனிதா போற்றி
தெருளிலா நாயினுமே கடையனா சிறியனையுமாட்
கொண்ட சிவமே போற்[றி],
குருவான பெரியோர் கடனின் மேலாங் குருமணி
யாயெழுந்த குணக்குன்றே போற்றி" (64)

இப்பாடலில், முதலெழுத்து குறில் - ஓசை ஒத்து நிற்க, இரண்டாம் எழுத்து 'ரு' ஒன்றிவர கொடுக்கப்பட்டிருக் கின்றது. அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒத்துவருகின்றது.

நாகலிங்கய்யா தம் நான்கு நூல்களில் பல பாடல்க்ளில் எதுகைத் தொடையினைப் பயன்படுத்தியிருப்பது சிறப்பாகும். எதுகையின் வகைகளைப் பயன்படுத்தியும் செம்மையாகப் பாடல் புனைந்துள்ளார்.

"அடிதோறுந் தலையெழுத்தொப்பது மோனை" (65) எனத் தொல்காப்பியமும் "எழுவாய் எழுத்தொன்றின் மோனை" (66) என்று யாப்பெருங்கலக்காரிகையும் கூறும். மோனை என்பது செய்யுளில் சீர்களிலோ, அடிகளிலோ, முதலெழுத்து ஒன்றிவரத் தொகுப்பதாகும். நாகலிங்கய்யாவின் பாடல்களில் இவ்வகைத் தொடைகள் பெருமளவில் கையாளப்பெற்றுள்ளன.

சொல் அல்லது பொருள் இவை தம்முள் முரண்பட்டு வரத்தொடுப்பது முரண்தொடையாகும். நாகலிங்கய்யா தமது நூல்களில் இத்தொடையினை மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார். சொல், பொருள் நிலைகளில் முரண்தொடையைப் பயன்படுத்துவதற்கு, பாடுபொருள் ஒரு காரணமாக அமைகின்றது. இதனை,

"வனமான கோசமைந்தும் வருவதன் முன்னும் பின்னும்" (67)

என்ற பாடல் விளக்கும். இப்பாடலில் பயின்றுவந்துள்ள முரண் 'கடையிணை முரண்' ஆகும். மேலும்,

"நானுமே பருத்திளைத்தேனானுயர் வெண்கையாலு" (இடைப்புணர்முரண்) (68)

"வரமான பூமியிலிறந்து மேயப்பூமி மாத்திரம் இருத்தல் போலத்" (69)

(பின்முரண்)

"பிறப்பு இறப்பாதியாம் விகாரமுள தனகோசம் பேசிடும் பசிகடாகம்" (70)

"பேய்த்தேராஞ் சிற்றறிவிற் சுகதுக்கங்கள் பெரியவனான் சிறியவனான்

பிறந்திறந்தேன்" (71) (கடைக்கூழை முரண்)

"சிதாகாசமான தன்னினலைகின்ற மனமாதியுயர்ந்துந் தாழ்ந்துந்" (72)

(கடையிணைமுரண்)

"தீனமுறு முயற்வுதாழ்வு வுற்றுமேயென்றுந் திகழ் பேதமாயுறலால் விசமாமன்றே"

(73) (இடைப்புணர்முரண்)

என்ற பாடல்களில் முரண்தொடைகள் பயன்படுத்தப் பட்டுள்ளன. நாகலிங்கய்யா, இணைமோனை, பொழிப்பு மோனை போன்ற மோனைத் தொடைகளை அதிகமாகப்

*பயன்படுத்தியுள்ளார். மோனைத்தொடை ஓசைநயத்தைத் தருவதாகும். எளிதில் மனனமும் ஆகும். எனவே செய்யுள்களில் மோனைத் தொடைகளை எளிமையாகப் பயன்படுத்தி மக்களைச் சென்றடைய வழி வகுத்துள்ளார். முரண் தொடையும் பல பாடல்களில் பயின்றுவந்துள்ளன.*

## அடிக்குறிப்புக்கள்

1. ஜி.ஜான் சாமுவேல், 'திறனாய்வுச் சிந்தனைகள்' பக் - 12 - 13
2. ச.வே. சுப்பிரமணியன், 'தமிழ் இலக்கியக் கொள்கை முதல் தொகுதி' ப - 322
3. எஸ். குளோரியா சுந்தரமதி (மொ.பெ.ஆ). "இலக்கியக் கொள்கை" ப- 156
4. மேலது
5. நாகலிங்கய்யா, 'பஞ்சகோசம்' பா - 28
6. மேலது, பா - 30
7. மேலது, பா - 34
8. தொல்காப்பியர், 'தொல்காப்பியம்' சூ. எ. 1591
9. நாகலிங்கய்யா, 'ஆத்மநாமம்' - பா- 20
10. மேலது, பா - 25.
11. நாகலிங்கய்யா, 'பஞ்சகோசம்' - பா - 35.
12. மேலது, பா - 45
13. நாகலிங்கய்யா, 'ஞான அந்தாதி' - பா - 44
14. நாகலிங்கய்யா, 'ஏது சொருபங்காரியம்' பா- 27
15. நாகலிங்கய்யா, 'ஞானஅந்நதாதி' - பா - 74
16. மேலது, பா - 54
17. மேலது, பா - 36
18. ச.வே. சுப்பிரமணியன், 'கம்பன் இலக்கிய உக்திகள்' - ப. 5
19. மு. வரதராசன், 'இலக்கியத்திறன்', பக் - 263 - 264
20. வெ.சு. அழகப்பன், 'பதினோராம் திருமுறைத்திறன்' - ப
21. நாகலிங்கய்யா, 'ஞான அந்தாதி' - பா - 18
22. நாகலிங்கய்யா, 'பஞ்சகோசம்'- பா - 28

23. நாகலிங்கய்யா, 'ஞானஅந்தாதி' - பா - 37
24. நாகலிங்கய்யா, 'ஆத்மநாமம்' - பா - 13
25. நாகலிங்கய்யா, 'பஞ்சகோசம்' - பா - 6
26. மேலது, பா - 23
27. மேலது, பா - 32
28. க.த. திருநாவுக்கரசு, "திருக்குறளில் கற்பனைத்திறனும் நாடக நலனும்", ப-51
29. மு. வரதராசன், 'இலக்கியத் திறன்' - ப - 173
30. நாகலிங்கய்யா, 'ஆத்மநாமம்' - பா - 38.
31. மு. வரதராசன், 'இலக்கியத் திறன்' - ப - 141
32. நாகலிங்கய்யா, 'ஏது சொருபங்காரியம்' - பா - 6
33. நாகலிங்கய்யா, 'பஞ்சகோசம்' - பா. 31
34. ந. சுப்புரெட்டியார், 'பாட்டுத்திறன்' - ப - 180
35. நாகலிங்கய்யா, 'ஆத்மநாமம்' - பா. 38
36. மேலது, பா - 45
37. மேலது, பா - 47
38. மேலது, பா - 19
39. நாகலிங்கய்யா, 'ஞான அந்தாதி' - பா - 14
40. மேலது, பா - 21
41. இரா. சீனிவாசன், 'சங்க இலக்கியத்தில் உவமைகள்' ப- 2
42. பொற்கோ, 'இலக்கணக் கலைக்களஞ்சியம்' - ப. 26
43. தொல்காப்பியர், தொல்காப்பியம் - உவமையியல் - சூ - 272
44. தண்டியலங்காரம், சூ - 31
45. நாகலிங்கய்யா, 'ஞானஅந்தாதி' - பா - 78
46. நாகலிங்கய்யா, 'பஞ்சகோசம்' - பா - 36
47. நாகலிங்கய்யா, 'ஆத்மநாமம்' - பா 17.
48. நாகலிங்கய்யா, 'ஞான அந்தாதி' - பா - 69
49. நாகலிங்கய்யா, 'ஞான அந்தாதி' - பா - 63
50. மேலது, பா - 80
51. ............ 'தண்டியலங்காரம் மூலமும் உரையும்' - ப - 48

52. நாகலிங்கய்யா, 'ஆத்மநாமம்' - பா - 13

53. நாகலிங்கய்யா, 'ஞான அந்தாதி' - பா - 10

54. நாகலிங்கய்யா, 'ஞான அந்தாதி' - பா - 91

55. நாகலிங்கய்யா, 'பஞ்சகோசம்' - பா - 44

56. மேலது, பா - 46

57. நாகலிங்கய்யா, 'ஞானஅந்தாதி' - பா - 76

58.59மேலது, பா - 10

60. மேலது, பா - 44

61. நாகலிங்கய்யா, 'ஏது சொருபங்காரியம்' - பா - 6

62. க. கைலாசபதி, 'கவிதை நயம் இரண்டாம் பதிப்பு' ப - 83

63. அமிர்த சாகரர், 'யாப்ருெங்கலக் காரிகை' - நூ - 16

64. நாகலிங்கய்யா, 'ஞானஅந்தாதி' பா - 92

65. தொல்காப்பியர் 'தொல்காப்பியம்' செய்யுளியல் - சூ - 88

66. அமிர்தசாகரர் 'யாப்பெருங்கலக்காரிகை' நூ - 16

67. மேலது, பா - 18

68. நாகலிங்கய்யா, 'பஞ்சகோசம்' - பா - 4

69. நாகலிங்கய்யா, 'ஆத்மநாமம்' - பா - 59

70. மேலது, பா - 58

71. நாகலிங்கய்யா, 'ஞான அந்தாதி' பா - 47

72. மேலது, பா - 48

73. நாகலிங்கய்யா, 'பஞ்ச கோசம்' - பா - 45



## பயன்பட்ட நூல்கள்


1. அத்வைதாந்த சுவாமிகள் - "பிரஹ்மானந்த அநுசந்தான விசார யுக்தி ரத்னாகரம்" சி. முனிசாமி முதலியார் அண்டு சன்ஸ் சிவகாசி விலாஸ் சென்னை. (1924)

2. அப்பா சுவாமி பிள்ளை - "வாசுதேவமனனம்" (இரண்டாம் பதிப்பு) இயற்றமிழ் விளக்க அச்சுக்கூடம். (சுக்லஹீ - தைமீ)

3. அருணா சலக் கவிராயர் - "நாகலிங்கதேசிகர் பிள்ளைத்தமிழ்" வாணிவிலாசம் பிரஸ், ரெயில்வே ஸ்டேஷன், திருநெல்வேலி - 1898.

4. அழகப்பன் - வெ.சு. - "பதினோராம் திருமுறைத் திறன்" கண்ணம்மை பதிப்பகம், 8.ப. - அ.லெ. தெரு, காரைக்குடி - 1.

5. ஆறுமுக சுவாமிகள் - 'நிஷ்டா நு பூதி மூலம்' ஜீவகாருண்ய விலாச அச்சியந்திர சாலை, சென்னை (1916)

6. இராமன், ப - "பரிபூரணானந்த போதம்" பங்கசம் பதிப்பகம், 44, இராமகிருஷ்ணமடம் சாலை, சென்னை - 4.

7. கண்ணையன், வெ. (பொ.ப) - "தமிழ்நூல் விவர அட்டவணை" தமிழ்நாட்டு அரசினர் தமிழ்வளர்ச்சி ஆராய்ச்சி மன்ற வெளியீடு (1961)

8. கணபதி, இரா. - "தெய்வத்தின் குரல்" (நான்காம் பாகம்)
3ஆம் பதிப்பு
வானதி பதிப்பகம், சென்னை (1916)

9. காசிகாநந்த ஞாநாச்சாரிய சுவாமிகள் - "மகாத்ம சரிதாமிருதம்"
பூவணநாதர் புத்தகாலயம்
106-எ கீழப்பெருமாள் மேஸ்திரி வீதி,
மதுரை - 1 (1974)

10. குருதேவர் - "குருதேவர் வாக்கியம்" (இலவச வெளியீட்டு நூல்)

11. குளோறியா சுந்தரமதி, எஸ். - (மொ.பெ.ஆ) "இலக்கியக் கொள்கை"
முதற் பதிப்பு,
பாரிநிலையம், சென்னை (1966)

12. கைலாசபதி, க. - "கவிதை நயம்"
(இரண்டாம் பதிப்பு) பாட்டாளிகள் வெளியீடு,
46, நாராயணப்பன் நாயக்கன் தெரு,
சென்னை (1976)

13. கோதண்டராமன், பொன். - (பொற்கோ) "இலக்கண கலைக்களஞ்சியம்"
தமிழ் நூலகம், சென்னை.

14. சங்கரவள்ளி நாயகம், அ. - "வ.உ.சி. வாழ்க்கை வரலாறும் இலக்கியப் பணிகளும்"
நியூ செஞ்சுரிபுக் ஹவுஸ் (1989)

15. சண்முக சுப்பிரமணியம், மா. - "ஞானச்சுடர்"
தமிழ்ப் புத்தகாலயம்,
576, பை கிராப்ட்ஸ் ரோடு,
சென்னை - 5. (1977)

16. சிங்கார வடிவேலன், அர. - "கண்டனூர் அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் கும்பாபிஷேக மலர்"
கண்டனூர் (13.1.92)

17. சிவவல்லி, சீ.ச. (தொகுப்பாசிரியர்) - "சமயச் சொல்லகராதி"
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை (1987)

18. சீனிவாசன், இரா. - "சங்க இலக்கியத்தில் உவமைகள்"
அணியகம்
22, செல்லத்தம்மாள் தெரு,
சென்னை (1973)

19. சுப்பிரமணியன், ச.வே. - "தமிழ் இலக்கியக்கொள்கை" (முதல் தொகுதி)
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 20.

20. சுப்பிரமணியன், ச.வே. - "கம்பன் இலக்கிய உக்திகள்" (முதற் பதிப்பு)
மெய்யம்மை பதிப்பகம், காரைக்குடி.

21. சுப்புரெட்டியார், ந. - "பாட்டுத்திறன்"
ஸ்டார் பிரசுரம், திருவல்லிக்கேணி,
சென்னை - 5. (1988)

22. சொக்கலிங்கம், தே. - "நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு"
11 தையல் நாயகி இல்லம்,
காரைக்குடி.

23. சோமசுந்தரன், அரு. - "கோவிலூர் ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவர் சரிதமும் பிள்ளைத்தமிழும்"
பிச. அரு. அரு.செந்தில்நாதன்
செட்டியார், தேவகோட்டை (1969)

24. திருநாவுக்கரசு, க.த. - "திருக்குறளில் கற்பனைத் திறனும் நாடக நலனும்"
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை (1973)

| | | |
|---|---|---|
| 25. நாகலிங்கய்யா | - | ஆத்மநாமம், பஞ்சகோசம், ஞானவந்தாதி, எதுசொரூபங்காரியம் வித்தியானுபாலன் எந்திரசாலை. (1876) |
| 26. நாகலிங்கய்யா | - | "வாசுதேவமனனம்" முத்தமிழாகர அச்சுக்கூடம், திருநெல்வேலி (1882) |
| 27. பாலுச்சாமி (மு.ப.) | - | வாழ்வியற் களஞ்சியம் தொகுதி ஒன்று தமிழ்ப் பல்கலைக்கழகம் தஞ்சாவூர் (1986) |
| 28. முத்துராமலிங்கய்யா, நா.பெ. நா.மு.- | - | "சூரக்குடி கும்பாபிடேகக் கவிதை" யூனியன் சென்றல் அச்சியந்திரசாலை, திருநெல்வேலி (1898) |
| 29. முத்துராமலிங்கய்யா, நா.பெ. நா.மு.- | - | "சுவானுபவத் திருவாக்கியங்கள்" மீமோரியல் அச்சுக்கூடம், சென்னை (1886) |
| 30. முத்துராமலிங்கய்யா, நா.பெ. நா.மு.- | - | "சுவானுபவத் திருவாக்கு" வித்தியாவர்த்தினி அச்சுக்கூடம் சென்னை (1879) |
| 31. முத்துராமலிங்கய்யா, நா.பெ. நா.மு.- | - | "சொரூபானு சந்தான நாமங்கள்" மீமோரியல் அச்சுக்கூடம், சென்னை (1886) |
| 32. முத்துராமலிங்கய்யா, நா.பெ. நா.மு.- | - | "முமூட்சு லட்சண ஸாரம்" ரிப்பன் பிரஸ், சென்னை (1897) |

33. முத்துராமலிங்கய்யா, நா.பெ. நா.மு.- - "சிவாலய சீரணோத்தாரணவிதி" விவேகபானுப் பிரஸ், மதுரை (1911)

34. முத்துராமலிங்கய்யா, நா.பெ. நா.மு.- - "வேதாந்தக் கும்மி" (1920)

35. முத்துராமலிங்கய்யா, நா.பெ. நா.மு.- - "புதுவயல் சுந்தரராசப் பெருமாள் கும்மி" (1920)

36. லெட்சுமணன், கி. - "இந்தியத் தத்துவஞானம்"

37. வரதாசன், மு. - "இலக்கியத்திறன்", பாரிநிலையம், சென்னை.

38. வடிவேலு செட்டியார், கோ.- "கைவல்லிய நவநீத வசன வினாவிடை" தமிழ்பல்கலைக்கழக மறுபதிப்பு, தஞ்சாவூர்.

39. வாடியா, ஏ.ஆர். (ப.ஆ) - "கீழை மேலை நாடுகளின் மெய்ப்பொருள் இயல் வரலாறு" (தொகுதி - 1) அண்ணாமலைப்பல்கலைக்கழகம் (1970)

40. ஸ்வாமி, எஸ்.கே. - "ஆதி சங்கரர் விசயம்" இன்பநிலையம், மயிலாப்பூர், சென்னை - 4. (1966)

41. ஜான் சாமுவேல், ஜி. - "திறனாய்வுச் சிந்தனைகள்" மணிபதிப்பகம், சென்னை (1977)

42. ............ - "கட்டளைப் பிரபந்தம்" (தொகுப்பு நூல்) மதராஜ் ரிப்பன் அச்சியந்திர சாலை, 87-தம்புச்செட்டி வீதி, சென்னை (1924)

43. அகராதி - "மதுரை தமிழ்ப் பேரகராதி"
(முதல், இரண்டாம் பாகம்)

44. அகராதி - "கலைக்களஞ்சியம்"
(முதல் தொகுதி)
தமிழ் வளர்ச்சிக் கழகம்
சென்னை (1954)

45. மகேசுவரி, ஆ. (ஆய்வேடு) - "தத்துவராயரின் தத்துவப்பணிகள்"
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி (1988)





நாகலிங்க அய்யாவை உலகறிய வேண்டும் என்ற முயற்சியில் கண்டனூர் பாலையூரைச் சேர்ந்த பாரதிசந்திரன் என்பார் மிக முயன்று ஆய்வு செய்து இதனை எழுதியுள்ளார். அவரது முயற்சியை நாம் பாராட்டுவதோடு அவருக்கு எல்லா நலன்களையும் அருளவேண்டும் எனக் கோவிலூர் அருள்மிகு கொற்றவாளீசர் உடனமர் திருநெல்லை திருவடி களைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

**தவத்திரு நாச்சியப்ப சுவாமிகள்**

கோவிலூர் மடாலய மடாதிபதி

இளைய தலைமுறையினர் எளிதான பொருள் பற்றி நூல் எழுதவே விரும்புவர். ஆனால் பாரதி சந்திரனோ இந்தியத் தத்துவ மரபில் கிளைத்துச் செழித்துப் பரவியிருந்த அத்வைதம் என்னும் தத்துவக் கொள்கையை அலசி ஆராயும் துணிவு மிக்கவராய் அதற்கேற்றவாறு அத்தத்துவ மரபில் ஆழ்ந்த புலமைமிக்கவராய் செயல்பட்டு மற்றவர்களிடமிருந்து வேறுபட்டுத் தனித்தன்மையுடன் திகழ்கின்றார்.

பேராசிரியர் **சிவமாதவன்**